# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



"சூழ்ச்சி எடுபடாது!"

ALKI | 26.12.2010 | ₹ 10.00 | 96 பக்கங்கள் | www.kalkionline.com



"அடுத்த
தல்வரை
யேசு
யமிப்பார்!"
– பால் தினகரன்

# உங்க ஊரு பொண்ணு!

# கல்கி

26.12.2010



2 தானு ஒரு பொய்யர்! -நாஞ்சில் சம்பத்

சூழ்ச்சி எடுபடாது! -பீட்டர் அல்போன்ஸ் 84

ஊசிப்பட்டாசு சுவரங்கள்! 88



உங்க ஊரு பொண்ணு! 48



91 விஜய் கட்டும் சர்ச்!

80 ஊர்வசி பட்டுப்புடைவைப் போட்டி முடிவுகள்!



8 பால் தினகரன் பேட்டி!

# தாணு ஒரு பொய்யர்!

## - நாஞ்சில் சம்பத்

''கேள்வி கேட்டால் வைகோவுக்குப் பிடிக்காது. எனவேதான் என்னைக் கட்சியிலிருந்து ஓரங்கட்டும் விதமாக, என் மகன் திருமணத்துக்கு வராமல் புறக்கணித்தார்'' என்று தயாரிப்பாளர் தாணு பல பேட்டிகளில் சொல்லியிருக்கிறார். அதற்கு ''தாணு ஒரு பொய்யர்'' என்று பதிலடி கொடுக்கிறார் ம.தி.மு.க. கொள்கை பரப்புச் செயலாளர் நாஞ்சில் சம்பத்.

''ம.தி.மு.க. தொடங்கி இரண்டு மாதம் கழித்து வந்தவர்தான் தாணு. இவர் வீட்டை சும்மா ஒன்றும் கட்சி நடத்த கொடுக்கவில்லை. 32 மாதம் கட்சி அங்கு நடந்தது. காலி செய்து வரும்போது ஐந்தரை லட்சத்துக்கு மொசைக் தரை மராமத்து செய்து கொடுத்துவிட்டுத்தான் வந்தோம். கட்சியினால் இவர் அடைந்த நன்மைகள் பல. குறிப்பாக பா.ஜ.க. ஆட்சி மத்தியில் நடந்தபோது, கட்சியைப் பயன்படுத்தி இவர் சம்பாதித்தது அதிகம். 'ஆளவந்தான்' படப்பிடிப்பை ராணுவத்துக்குச் சொந்தமான இடத்தில் நடத்த வைகோதான் அனுமதி வாங்கிக் கொடுத்தார். ம.தி.மு.க. கட்சிப் பெயரை பயன்படுத்தி அவர் அடைந்த ஆதாயங்களும் ஏராளம். 1998ல் இவர் மகள் திருமணம் நடந்தபோது கருணாநிதி, தி.மு.க. அமைச்சர்கள் வந்தார்கள். அவர்களை வரவேற்று வைகோவை ஒதுக்கி வைத்து அவமானப்படுத்தினார்.

'கந்தசாமி' படத்தின் பாடல் வெளியீட்டு நிகழ்ச்சிக்குக் கூப்பிட்டுவிட்டு, பிறகு வர வேண்டாம் என்று வைகோவை அவமானப்படுத்தினார். கந்தசாமி பிரிவ்யூவின் போதும் வைகோவை அழைத்துவிட்டு, உள்ளூரில் இருந்துகொண்டே வராமல் ஹைதராபாத்தில் இருப்பதாகப் பொய் சொன்னார். ம.தி.மு.க.வின் ஆட்சி மன்றக் குழு உறுப்பினராக இருந்துகொண்டே செம்மொழி மாநாட்டுக்கு 45 நாட்கள் பினாமி பெயரில் விளம்பரம் கொடுத்தார். கனிமொழி ராஜ்ய சபா உறுப்பினரானபோது 'திராவிடத்தின் ஒளி விளக்கே' என்று விளம்பரம் கொடுத்தார். கட்சியில் இருந்து பல


* தாணு


* நாஞ்சில் சம்பத்

பிரமுகர்கள் வெளியேற இவரே காரணம். ஏன் இப்போது நடந்த திருமணத்தின் போதுகூட ம.தி.மு.க.வினருக்கு மட்டும் கொடுக்க வைகோ அவர் மனைவி ஆகியோர் படம் போட்ட பத்திரிகையையும், அது தவிர கருணாநிதி - ஸ்டாலின் படம் போட்ட பத்திரிகையையும் அடித்து இருக்கிறார். ம.தி.மு.க.வில் இருந்துகொண்டே கருணாநிதியுடன் தொடர்பில் இருந்த தாணுவின் முகமூடி கிழிந்துவிட்டது. இவரால் கட்சிக்கு எந்தப் பயனும் இல்லை. வைகோ ஜனநாயகவாதியாகவும், சகிப்புத் தன்மை கொண்டவராகவும் இருப்பதால்தான் இவ்வளவு காலம் நீடித்தார். கட்சியைப் பிடித்த கறையான் ஒழிந்தது.''



**"ம.தி.மு.க.வில் இருந்துகொண்டே கருணாநிதியிடம் தொடர்பில் இருந்த தாணுவின் முகமூடி கிழிந்துவிட்டது."**

**தாணு என்ன சொல்கிறார்...**

*''தம்பி தாஞ்சில் சம்பத் சொன்னது, 99 சதவிகிதப் பொய். படப்பிடிப்புக்கு வைகோ அனுமதி வாங்கித் தந்தது மட்டுமே உண்மை. சம்பத் ஒரு அம்புதான். விடுவது வைகோ. இது வரை கலையுலகிலும், பொது வாழ்விலும் கண்ணியம் காத்து வந்திருக்கிறேன். இனியும் அதைத் தக்க வைக்க விரும்புகிறேன். எனவே, மௌனம் காட்டுவதே சரியென்று நினைக்கிறேன்; இலாவணி பாட விரும்பவில்லை.''*

- ப்ரியன்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**
பொறுப்பாசிரியர்:
**ஆர்.வெங்கடேஷ்**
உதவி ஆசிரியர்கள்:
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**
வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**



தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899
ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com
இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com





சந்தா விவரம் (ஒரு வருடம்):
உள்நாடு : ₹ 500/-
வெளிநாடு : ₹ 3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

## நீங்கள் கேட்டவை

*அரசு ஐந்நூறு கோடி ஒதுக்கி யிருப்பது குறித்து...?*

! அதைப்போல் மூன்று - நான்கு மடங்கு கோரி மத்திய அரசிடம் மனு செய்திருக்கிறது. மொத்தத் தில், வெள்ள நிவாரண வினி யோகத்தில் பழுத்த வேட்டை நிக ழும் என்று எதிர்பார்க்கலாம்.

●ஆர்.விஸ்வநாதன்,
சென்னை - 78

*? மன்மதன் அம்பு படத்துக்காக கமல் எழுதியுள்ள பாடல் சர்ச்சை யைக் கிளப்பியிருப்பது பற்றி...?*

! ஹிந்து மதத்துக்கு இழுக்கு செய் துள்ளார் கமல் என்று பலர் கொதித்துப் போயிருக்கிறார் கள். உண்மையில் அவர் தமக்குத் தாமே இழுக்கு செய்து கொண்டிருக்கிறார்; திரையுலகுக்கு அவப் பெயர் தேடித் தந்திருக்கிறார் - அப்பாடலில் இடம் பெற்றுள்ள வக்கிர சிந்தனை மூலம்!

# மன்மதன் அம்பு சர்ச்சை?



● அவப்பெயர் அம்புகள்!

●என். காளிதாஸ், சிதம்பரம்

*? பெட்ரோல் விலை உயர்வு பற்றி...?*

! சர்வதேச கச்சா எண்ணெய் விலைக்கு ஏற்ப இந்திய பொதுத்துறை எண்ணெய் நிறுவனங்கள் விலை நிர்ணயம் செய்து கொள்ளலாம் என்று அரசு அனுமதி அளித் ததன் விளைவு இப்படித்தான் இருக்கும் என்பது எல்லோரும் எதிர்பார்த்ததுதான். கச்சா எண்ணெய் விலை ஏறினால் இங்கே பெட்ரோல் விலை ஏறுகிறது. அங்கே விலை குறைந்தால் இங்கேயும் குறைய வேண்டுமல்லவா? ஊஹூம்...; அது மட் டும் நடக்க மாட்டேங்குது!

●த.சத்தியநாராயணன், அயன்புரம்

*? வெள்ள நிவாரணத்துக்காக தமிழக*

●பி.தர்சினி, குடந்தை

*? "மழையால் மக்கள் பாதிக்கப்பட்டிருக் கும்போது இளைஞன் பாடல் வெளியீட்டு விழாவில் கலைஞர் கலந்துகொண்டது மக்கள் பணியா?" என்று ஜெ.கேட் கிறாரே?*

! 'இவர் ஓய்வெடுக்க அவ்வப்போது கொட நாடு சென்று விடுகிறாரே, அது மக்கள் பணியா?' என்று எதிர்க்கட்சிக்காரர்கள்

கேட்கிறார்களே; அதற்கு என்ன பதில் சொல்லுவார்?

● பி.ராம்பிரசாத், சென்னை - 43

*? முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வி. நூற்றாண்டு விழாவில் பெரிய பிரபலங்கள் யாரும் பங்கேற்கவில்லையே?*

! நல்லதாச்சு! ஆர்.வி.யின் கௌரவம் காப்பாற்றப்பட்டது. இன்றைய சூழல் இப்படித் தான் சிந்திக்கச் செய்கிறது.

★

● எஸ்.பக்கிரிசாமி, புதுச்சேரி

*? நார்வே நாட்டில் நோபல் பரிசு வழங்கும் விழாவில் கலந்துகொள்ள வேண்டாமென்று உலக நாடுகளுக்கு சீனா விடுத்த கோரிக்கை பற்றி...?*

! மிரட்டலுக்குப் பணிந்து பாகிஸ்தான், இலங்கை உள்ளிட்ட பல நாடுகள் கலந்து கொள்ளவில்லை. அதைக் கவனியுங்கள்! வெட்கக்கேடு!



* கொடநாடு கேள்விகள்!

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

*? "நாகரிகத்தோடு அறிக்கை விட ஜெயலலிதா கற்றுக் கொள்ள வேண்டும்; இல்லாவிட்டால் வட்டியும் முதலுமாக வாங்கிக் கட்டிக் கொள்வார்," என்று அமைச்சர் பொன்முடி எச்சரித்திருப்பது பற்றி...?*

! யாரிடம் கற்பதாம்? அதையும் பொன்முடி சொன்னால் பொருத்தமாயிருக்கும்.



* நேர்மைப் பஞ்சம்

★

● கே.வேலுச்சாமி, தாராபுரம்

*? தமிழகத் தேர்தல் அதிகாரியுடன் நடத்திய கலந்தாய்வில் நமது அரசியல் கட்சிகள் பல்வேறு கோரிக்கைகளை முன் வைத்தன. ஆனால் தி.மு.க. வினர் மட்டும், "எதிர்க்கட்சியினர் வன்முறையில் ஈடுபடுவார்கள்; கள்ள வோட்டுப் போடுவார்கள்; வாக்குச் சாவடியைக் கைப்பற்றுவார்கள். இவற்றையெல்லாம் தடுக்க வேண்டும்," என்று கோரிக்கை வைத்துள்ளதே?*

! பண விநியோகமும் இலவசங்கள் விநியோகமும் வெள்ளமாகப் பெருகும் என்றும் சேர்த்துக் கொண்டிருந்தால் "தன் நிலை விளக்கம்" முழுமை பெற்றிருக்கும்.

● ம.திருவேங்கடம், ஊத்தங்கரை

*? வேலூர் பொற்கோயிலில் தேசியக் கொடி ஏற்றப்பட்டுள்ளது. கோயில்களில் இப்படிக் கொடி ஏற்றலாமா?*

! கோயில்களுக்கென்று தனி கொடிமரம் உண்டு. அதில் தெய்விகமும் உண்டு. தேச பக்தி என்பது தெய்வ பக்திக்கு ஈடானதுதான். என்றாலும் மரபுகளைக் காப்பதும் முக்கியம் தான். கோயில் வளாகத்துக்கு அருகே (வெளியே) தேசியக் கொடி ஏற்றி வணங்குதல் நலம்.

❐

● இரா.சக்கரபாணி, மதுரை

*? ராஜபக்ஷேவும் அவரது சகோதரர்களும் ஈழத்தமிழர்களுக்கு எதிராகப் போர்க் குற்றங்களைச் செய்த காட்சிகளைப் பார்த்து அதிர்ந்துபோன ஐ.நா. அமைப்பு, மனித உரிமை மீறல்களை விசாரிக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறது. ஆனால், நமது மத்திய அரசோ தமிழர்களுக்கு உதவும்படி ராஜபக்ஷேவிடம்*



* விசாரணை வலியுறுத்தல்!

கெஞ்சிக் கொண்டிருக் கிறதே...?

! 'பாகிஸ்தான் ஒரு புறம்; சீனா மறுபுறம் அச்சுறுத்திக் கொண்டிருக்க, தெற்கே இலங்கையை மிரட்டி பகைத் துக்கொள்ள வேண்டாம்' என்று அயலுறவுத் துறை கொள்கை ரீதியில் முடி வெடுத்திருக்கலாம். மிரட்டா விட்டாலும் கெடு வைத்து வற்புறுத்துவது சாத்தியமே. அதற்கு நமக்கு உரிமையும் உண்டு. மனமோகன கிருஷ்ணா!

● எம்.சம்பத்,
வேலாயுதம்பாளையம்

? கிரிமினல் வழக்குகளில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டிருந்தாலே தேர் தலில் போட்டியிடத் தடை செய்யும் புதிய சட்டம் வரப்போகிறதாமே?

! அது மக்கள் நல அமைப்புகளின் நியாயமான ஆசை. அது நிறைவேறாமல் கவனித்துக் கொள்வது இன் றைய அரசியல்வாதிகளின் பேராசை, துராசை. நிகர விளைவு, மக்களிடம் நிராசை.

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

? தொலைத்தொடர்புத் துறை பற்றிய தொழில்நுட்ப அறிவோ வர்த்தக ஞானமோ இல்லாதவர் ஆ.ராசா என்று அமெரிக்க 'நியூ யார்க் டைம்ஸ்' பத்திரிகை கூறியிருக்கிறதே?

! அந்தந்தத் துறைக்கான அறிவும் ஆற்றலும் இருப்பவர்கள்தான் அமைச்சராக் கப்பட வேண்டும் எனில் நம் நாட்டில் அமைச்சரவை அமைப்பதே ரொம்ப கடினம்! அமைச்சர் பொறுப்பில் இருப்பவர் நம்பிக்கைக்குரிய அதிகாரிகளின் வழிகாட்டலை ஏற்பவராகவும் அப்பழுக் கற்ற நேர்மையாளராகவும் இருந்தால் போதும். அதற்கு இங்கு பஞ்சம் என்பதுதான் சோகம்.



✱ நூற்றாண்டில் நன்மை!



✱ புழுத்த சிந்தனை!



✱ நாகரிக மிரட்டல்!

● அ.சுகுமார், காட்பாடி

? வாலியின் நினைவு நாடாக் கள் தேவையற்ற புழுக் களை வெளிக்கொண்டு வரு கிறதே?

! உணவு தானியத்தில் கல் மண் இருந்தால் களைந்து பயன்படுத்தலாம்; புழுத்துப் போனால் தெரு ஓரக் குப்பைத் தொட்டியில்தான் மூட்டை கட்டிப் போடவேண்டும். எழுத்தும் அப்படித்தான்!

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

? தொலைத்தொடர்பு அமைச் சராக இருந்த ராசாவுக்கு, தம்முடைய பெர்சனல் டைரியை ஒளித்து வைக்க வேண்டும் என்பது ஏன் தோன்ற வில்லை?

! தம் மீது குற்றம் சுமத்தக்கூடிய விஷயம் எதுவும் அதிலே சி.பி.ஐக்கு அகப்படாது என்ற நம்பிக்கைதான் காரணம். தடயங்கள் சாட்சியங்களை அழிக்க வருஷக்கணக்கில் அவ காசம் தந்துவிட்டுத் தானே அந்த மூன்றெ ழுத்து முடுக்கிவிடப் பட்டிருக்கிறது!

❑ ரூ.150/ பரிசு பெறுபவர்:
இரா.சக்கரபாணி, மதுரை

✱ ரூ. 75/ பரிசு பெறுபவர்:
எஸ்.பக்கிரிசாமி, புதுச்சேரி
கே.வேலுச்சாமி, தாராபுரம்

புகழ்பெற்ற கிறிஸ்தவ ஆன்மிகத் தலைவர், கல்வியாளர், லட்சக் கணக்கான மக்களின் துயரத்தை ஜபத்தினால் மட்டுமே நீக்குபவர் டாக்டர் பால் தினகரன். நம்மை வரவேற்ற அவர்... ''தேவனே! கல்கி இதழ் வாசகர்களுக்கும், நிறுவனத்தாருக்கும் இந்த கிறிஸ்துமஸ் நிமித்தமாய் அநேக நன்மை உண்டாகும்படி ஆசீர்வதிப்பீர். இந்தச் செய்தியைப் படிக்கிறவர் அனைவருக்கும் அத்தனை பாக்கியத்தையும் தமது அருளால் கிடைக்க உம்மை பிரார்த்திக்கிறேன் ஆண்டவனே! ஆமென்...'' என்று ஜபம் செய்து, பிறகே நமது கேள்விகளுக்குப் பதிலளிக்கத் தொடங்கினார்.

**அதிலிருந்து...**

● அனைத்து மக்களுக்கும் சொல்லும் கிறிஸ்துமஸ் செய்தி என்ன?

''நாம் ஒவ்வொருவரும் கடவுளோடு இருக்கும் உறவை பலப்படுத்தி, நாம் செய்த குற்றங்களை, குறைகளை அவரிடம் ஒப்படைத்து மனம் திருந்தி, கடவுளோடும் நமது குடும்பத்தோடும் சமூகத்தோடும் சமாதானம் அனுபவியுங்கள். அன்பின் மூலம் அனைத்தையும் அடையும் சாத்தியம் உண்டு என்பதை நம்புங்கள் என்பதுதான் எனது கிறிஸ்துமஸ் செய்தியாய் இருக்கும்.''

● கிறிஸ்தவத்தில் ஒரே கடவுள் இயேசுதான். ஆனால், R.C., C.S.I., பெந்தகோஸ்தே, இன்னுமின்னும் பல்வேறு குழுக்கள். ஏன், அவைகளை இயேசுவின் பெயரால் ஒன்றிணைக்க முடியாதா?

''பல்வேறு மனிதர்களால் உருவாக்கப்பட்ட ஸ்தாபனங்கள், மனிதர்களைப் போல பல பிரிவுகளை, வேறுபாடுகளைக் கொண்டிருக்கும். ஆனால், தேவன் ஒருவனே! எல்லோருக்கும் பிரச்னைகள் உண்டு. எனவே பிரார்த்தனை மூலம் அவர்களைச் சேர்த்து அவற்றைத் தீர்க்க முயல்கிறோம். எங்கள் பிரார்த்தனைக்கு எல்லாப் பிரிவு மக்களும் வருகின்றனர். நாங்கள் சபை நடத்தவில்லை. பிரார்த்தனை மூலம் அவர்களை ஒன்றிணைக்க முயல்



கிறோம்.''

● ஆட்சி மாற்ற சக்தியாக கிறிஸ்தவர்கள் உருவாகாதது ஏன்? கிறிஸ்தவ அரசியல் தலைவர்கள் யாரும் இல்லாததுக்குக் காரணம் என்ன? அடுத்த முதல்வருக்கான உங்கள் விருப்பம் எது?

''சட்டசபையில் அடித்துக்கொள்கிற இருவேறு கட்சிகளின் எம்.எல்.ஏ.க்கள் எங்கள் ஜபக்கூட்டத்தில் பக்கத்துப் பக்கத்து சீட்டில் உட்காருகிறார்கள். சட்டம் சாதிக்காததை ஜபம் சாதிக்கிறது. இயேசுவை ராஜாவாக்க பலர் விரும்பினபோது என் ராஜ்யம் இந்த உலகத்துக்காக அல்ல. நான் எல்லோருக்குமான பரலோக ராஜா என்று சொன்னார். எனவே எங்களுக்கு இந்தத் தமிழக ராஜ்யத்தில் விருப்பம் இல்லை. நம்மை யார் ஆண்டாலும் அவர் கடவுளின் பிரதிநிதி. நாங்கள் கடவுளிடம் பிரார்த்திப்போம்... வரும் தேர்தலில் மக்களுக்கு நன்மை உண்டாக்கும் முதல்வரை தாவென்று. அவருக்குத் தெரியும், யாரைத் தேர்ந்தெடுப்பது என்று. தமிழக முதல்வரை இயேசுதான் தீர்மானிக்கிறார். இயேசுவின் முடிவுக்கு நாங்கள் கட்டுப்படுவது நம் கடமை.''

● ஒரு தலித் கிறிஸ்தவராக மாறினாலும் அங்கும் சாதிப் பாகுபாடு அப்படியே உள்ளது. அவர்களுக்குத் தனி சுடுகாடு, தனி சபை. சமூக மனமாற்றம் இல்லாத மதமாற்றம் அர்த்தமற்றது தானே?

''நிச்சயம் இது மாறித்தான் ஆகவேண்டும். இயேசுவை நம்பும் ஒருவர் மனிதர்களுக்குள் பாகுபாடு காட்டுவது அபத்தம்தான். ஆயினும் இந்தச் சாதிய உணர்வு இப்போது குறைந்துவிட்டது என்பதாக நம்புகிறேன்.''

● அப்பா டி.ஜி.எஸ். தினகரனிடம் என்ன கற்றுக் கொண்டீர்கள்?

''இறைவன் மீதான வைராக்கியமான பய பக்தி. நமது பிரார்த்தனையில் நேர்மையும் உண்மையும் இருந்தால் இறைவன் செவி கொடுப்பார். மகிமை நிகழும். அப்போது அதை நீ சாதித்ததாகச் சொல்லும் அகம்பாவம் தவிர். உன் மூலமாக தேவன் இதைச் சாதித்தார் என்று உணர். இறை பயபக்தி இருந்தால் எந்த ஒரு மனிதனும் நம்மைத் தள்ளிவிட முடியாது என்பார். இதைத்தான் அப்பாவிடம் கற்றேன்.''

# அடுத்த முதல்வரை இயேசு நியமிப்பார்!

- டாக்டர் பால் தினகரன்



> "பயபக்திதான் நம்மை உலக நாடுகளுக்கான கருணை தரும் நாடாக மாற்றும்."

● **யதார்த்த வாழ்வில் பிரார்த்தனையின் பங்கு என்ன? தனி மனித ஆறுதலுக்கு வேண்டுமானால் பயன்படலாம் - நாட்டு வளர்ச்சிக்கு இது என்ன செய்யக்கூடும்? எல்லாவற்றுக்குமா பிரார்த்தனை?**

''நான் உலக நாடுகள் முழுக்கப் பயணப்பட்டுவிட்டேன். ஐரோப்பிய, கனடா நாடுகளில் பிரார்த்தனை என்றால் சிரிப்பார்கள். பல நாடுகளில் கடவுள் நமக்குத் தேவையில்லை என்ற கருத்து பரவி வருகிறது. காலை எழுந்தது முதல் படுக்கப் போகும் வரை ரேடியோ, டி.வி.யில் ஆபாசம்... ஆபாசம்தான். இந்தியாவில்தான் ஊடகங்களில் பக்திப் பாடல்கள் காலையும் இரவும் ஒலிக்கிறது. பொருளாதார நெருக்கடியிலிருந்து இந்தியாவைக் காப்பாற்றியதுகூட இந்திய மக்களின் இறைபக்திதான் - அது கிறிஸ்துவாக இருக்கட்டும், கிருஷ்ணனாக இருக்கட்டும். இந்த இறை பக்தி, பயபக்திதான் நம்மை உலக நாடுகளுக்கான கருணை தரும் நாடாக மாற்றும். அனைத்துக்குமான அரிய மருந்து பிரார்த்தனைதான்.''

● **பிரார்த்தித்தால் உடனே கொடுத்துவிடுவாரா கடவுள்?**

''அனைத்தும் நன்மைக்கு ஏதுவாக நடக்கும்'' என்கிறது வேதம். ஆனால் அது நீ கேட்ட மாதிரியே நடக்காது. இயேசு தீர்மானித்துள்ளபடி வேறொரு சூழலில், வேறுவிதமாக இறைவன் நடத்துவார். நீ காத்திருக்க வேண்டும் - அதுவரை. இயேசுவைப் பிரார்த்தித்து IAS எழுதி, முழுமூச்சோடு படிக்கும் ஒருவன் 3 முறை தோல்வியைத் தழுவுகிறான். திடீரென வேறொரு சந்தர்ப்பத்தில் வேறு ஒரு தேர்வு எழுதியவன் இப்போது உயர் அதிகாரியாக 8 ஏக்கர் நிலத்தோடு அமெரிக்காவில் அதிகாரத்தில் இருக்கிறான். நீ கேட்ட அதிகாரம், வசதி, புகழை எங்கு எப்படித் தருவது என்று அவர்தான் தீர்மானிப்பார்.''

● **உங்களை வருத்தமடையச் செய்யும் விஷயம் எது? அதற்கான தீர்வாக எதைச் சொல்வீர்கள்?**

''ஒரு நாளைக்கு ஆயிரக்கணக்கில் விவாகரத்துக் கோரி பிரார்த்தனை செய்யச் சொல்லி கடிதங்கள் வருகின்றன. இதுதான் சங்கடத்தையும் வருத்தத்தையும் தருகிறது. அதீதமாய் தனிமனித சுதந்திரத்தை விரும்புவதும், தானே யார் தயவின்றியும் வாழ முடியும் என்கிற அசட்டு வைராக்கியமும்தான் இதற்குக் காரணம். அகந்தை அழித்து அன்பைக் கூட்டி, விட்டுக் கொடுக்கும் பண்பை வளர்த்து கொள்ள வேண்டும். இது நம் நாட்டின் கலாசாரத்துக்கும் பண்பாட்டுக்கும் நல்லது.''



**சந்திப்பு: அமிர்தம் சூர்யா**

**படம்: ஸ்ரீஹரி**

# வாரம் ஒரு மந்திரம்

# யமனுக்கும் கூட

**நன்**றாக வாழ்ந்த ஒருவருக்கு, திடீரென்று பிரச்னைகள்; நண்பரிடத்தில் உதவி கேட்கலாம் என்று நினைக்கிறார். மனைவியும் அப்படியே ஆலோசனை சொல்ல. . . துவாரகையை நோக்கிப் புறப்பட்ட குசேலரைப் போல் புறப்பட்டுவிட்டார். இல்லையில்லை, அந்த அளவுக்கு மோசமில்லை. கிழிசல் மூட்டை அவல் இல்லாமல், ஒன்றிரண்டு நல்ல அன்பளிப்புகளோடு சென்றார்.

போகும்போதே தயக்கம்; ஏனெனில், தொழிலில் அவரைவிட உயரமாக வளர்ந்து விட்டோம் என்பதற்காகப் பொது இடத்தில்கூட, அவரைக் காணாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டது தமக்கே ஞாபகம் இருக்கும்போது, அவருக்கு மறந்துவிடுமா என்ன? வேறு வழியில்லை; இன்னும் பலருக்குத் தம்முடைய நிலைமை தெரிந்து, மொத்தமாக கௌரவம் பறிபோவதைவிட, இது பரவாயில்லை.

உள்ளுக்குள் கூசினாலும், வெளியில் ஒரு நீண்ட புன்னகையோடு போய் உட்கார்ந்தார். யாரிடம் போனாரோ, அவர் இவரைவிட சாதுரியமானவர். இவருடைய பிரச்னைகளைக் கேட்டு, விழுந்து விழுந்து சிரித்தார்.

'என்ன அண்ணே, நீங்க பரம்பரையா தொழில் செய்யறவங்க. என்னை மாதிரி சந்தைக்குப் புதுசா? எப்படி ஏமாந்தீங்க? அப்பா, தாத்தா காலத்திலேயே இதைப் பார்த்திருப்பீங்களே' என்று கிண்டலான தொனியில் அவர் பேசப் பேச, சர்வ நாடியும் ஒடுங்கிப் போயிற்று.

இருவர் செய்வதும் ஒரே தொழில்; இருவருக்கும் அநேகமாக ஒரே வயது; ஆனால், அதிலும்கூட, பரம்பரை -- பரம்பரையின்மை, புதுசு -- புதுசின்மை என்று குல பேதங்கள் பார்க்க முடியுமா?

வெளியில் வரும்போது, உதடுகளின் புன்னகை கோணிப்போனது. தொண்டையில் ஏதோ அடைக்க, கண்களில் முட்டிய கண்ணீருக்கு மதகு போட இயலவில்லை. நேற்று இரவு ஊற்றெடுத்த எண்ணம், இன்னும் வேகமாக எட்டிப் பார்த்தது. 'இந்த மனிதர்களிடம் தஞ்சமடைவதைவிட, யமனிடம் தஞ்சமடைந்துவிடலாமே!' முடியாதே...




ஏதும் அறியா மனைவியையும் பால் மணம் மாறா பிள்ளைகளையும் விட்டுவிட்டுப் போனால், அதற்காகவும் அடுத்தவர்கள் திட்டித் தீர்ப்பார்களே!

செய்வதறியாது திரும்பியபோது,

## டாக்டர். சுதா சேஷய்யன்



தெருமுனைக் கோயில் கண்ணில்பட்டது. இத்தனை நாள், அரக்கப் பரக்க ஆகாயக் கோட்டையைப் பிடிப்பதற்காக ஆலாய்ப் பறந்தபோது, கோயில் வாசலில் நின்றவர்கள் கோமாளி

# இடமில்லை!

களாய்த் தெரிந்தார்கள். 'ஏன் இப்படி நேரத்தை வீணடிக்கிறார்கள்? இந்த நேரத்தில் இன்னும் இரண்டு பங்காளிகளைச் சந்தித்தால், தொழிலை மேம்படுத்தலாமே!' -- தம் நினைப்பின் மதர்ப்பைத் தாமே அடக்கிக்கொண்டு ஆலயத்துள் நுழைந்தார்.

நண்பர் இல்லத்துள் நுழைந்தபோது இருந்த நாணமோ, அவரைச் சந்தித்தபோது தோன்றிய குல வேறுபாடோ, அங்கிருந்து மீண்டபோது ஏற்பட்ட யம பயமோ, இப்போது கிஞ்சித்தும் இல்லை.

*ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்*
*நன்றே நினைமின் நமனில்லை நாணாமே*
*சென்றே புகும் கதியில்லை நும் சித்தத்து*
*நின்றே நிலைபெற நீர் நினைந்துய்மினே*

திருமூலர் - திருமந்திரம் - 2104

எந்த பேதமும் இல்லாமல், எந்தவித நாணமும் தடை செய்யாமல், சென்று விழுகிற கதி, கடவுள் மட்டுமே! கஷ்டம் வந்த பின்னர்கூட, கடவுள் உதவுகிறார் என்றால், கஷ்டம் வருவதற்கு முன்னரே அவரை நினைந்துவிட்டால்...? ஆமாம், கடவுளை நினைக்கிற நெஞ்சத்தில் கடவுளும் நன்மைகளும் குடிபுகுந்துவிடுவர்; பிறகு அங்கே, துன்பத்துக்கும் சிக்கலுக்கும் ஏன், யமனுக்கும் கூட இடமில்லை.

(மந்திரம் ஒலிக்கும்...)



# கல்கி




2010 டிசம்பர் 26
விக்ருதி மார்கழி 11
மலர் : 69
இதழ் : 22


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## ஒழிக்க வேண்டிய ஊழலை ஒளிக்கலாகுமா!

**க**டந்த தலைமுறையில் புலனாய்வு பத்திரிகைகள் ஊழல், லஞ்சம் நிகழ்ந்ததற்கான ஆதாரங்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. இந்நிலை இன்று மாறிவிட்டதைச் சுட்டிக் காட்டினார் 'தி கார்டியன்' இதழின் ஆசிரியர். ''பொதுமக்களே பத்திரிகையாளர்களாக மாறி, கருத்துகளை மட்டுமின்றி தங்களுக்குக் கிட்டிய ஆதாரங்களையும் சமர்ப்பிக்க வழி பிறந்துள்ளது. இணையதள இதழியல் இவ்வகையில் பெரும் புரட்சிக்குக் காரணமாக அமையும்'' என்று சில மாதங்களுக்கு முன் சென்னையில் உரையாற்றியபோது கூறினார்.

கம்ப்யூட்டரும் செயற்கைக் கோளும் கைகோத்த பிறகு உலகில் எதுவுமே ரகசியமில்லை என்று ஆகிவிட்டது. இணையம் என்ற எல்லையற்ற எலெக்ட்ரானிக் தகவல் பரப்பு உருவாகி நிலை கொண்டுவிட்ட சூழலில், தகவல் பெருக்கம் மட்டுமின்றி கருத்துப் பதிவும் பரிமாற்றமும் வெகு சுலபமாகிவிட்டன.

இதைப் புரிந்து கொள்ளாமல், அல்லது புரிந்தும் ஏற்க இயலாமல்தான் விக்கி கசிவுகளைத் தொடர்ந்து விக்கிலீக்ஸ் அதிபரை அமெரிக்க அரசு பழிவாங்க முயற்சி செய்கிறது. உயரதிகாரிகள், அரசியல்வாதிகளின் ஊழலையும் அநாகரிகப் போக்கையும் அம்பலப்படுத்துவோரை ஒழித்துக் கட்டுவதில் காட்டப்படும் கவனமும் முயற்சியும் அந்தக் குற்றங்குறைகளை ஒழிப்பதற்குப் பயன்பட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

இந்தியாவிலும் இதே விசித்திர முரண்பாடைத்தான் காண்கிறோம். 'ராடியா ஒலிப்பதிவுகளைக் கசியவிட்டவர்கள் யார்?' என்று ஆட்சிப்




பொறுப்பில் இருப்பவர்கள் ஆத்திரப்படுகிறார்களேயொழிய அக்கசிவுகள் வெளிப்படுத்தும் அதிர்ச்சிகரமான உண்மைகளை ஏற்று, நிலைமையைச் சீர் செய்ய யாரும் முன்வரவில்லை.

''நடந்தது நடந்துவிட்டது; தவறிழைத்தவர்கள் ஒருபுறம் கண்டறியப்பட்டு தண்டனை பெறட்டும். மறுபுறம், இது மீண்டும் நிகழாத வகையில் நாம் என்ன செய்யவேண்டும் என்பதைத் தீர்மானிப்போம்'' என்று எதிர்க்கட்சியினரும் இறங்கிவந்து ஆக்கபூர்வமான அணுகுமுறையைக் கையாளவில்லை. நாடாளுமன்றத்தின் குளிர்காலத் தொடர் ஒருநாள் கூட நடைபெறாமல் ஸ்தம்பித்துப் போனதுதான் மிச்சம்! ஆதிக்க சக்திகளின் சுரண்டலுக்கும் அக்கிரமத்துக்கும், வேறு வழியின்றி துணை போகிறவர்கள் அந்தக் கணத்தில் அதை எதிர்க்காவிட்டாலும், பிற்பாடு சமயம் வாய்க்கும்போது அதை அம்பலப்படுத்திவிடுகிறார்கள். அவ்வாறு தகவல்களைக் கசியவிட்டு பகிரங்கப்படுத்துவதற்கான வசதி - வாய்ப்புகளும் அதிகரித்துவிட்டன.

'பாதுகாக்கப்பட்ட ராணுவ ரகசியங்கள்' கூட இந்த எலக்ட்ரானிக் யுகத்தில் ரகசியங்களே அல்ல; அவற்றுக்குப் பாதுகாப்பும் கிடையாது என்பதுதான் யதார்த்தம். தில்லியில் பிரம்மாண்ட ஸ்பெக்ட்ரம் ஊழலை ஓராண்டுக்குமேல் பூசி மெழுக முயன்றும் முடியவில்லை. மஹாராஷ்டிரத்தில் ஆதர்ஷ் கட்டிட ஊழல், முதல்வரைக் காவு கொண்டது. கர்நாடகாவில் எடியூரப்பா முதல்வராக நீடித்தபோதிலும் பி.ஜே.பி. தலைமையே ஒப்புக்கொண்டுவிட்ட நில ஒதுக்கீடு ஊழலை ஒளிக்க முடியாது. தமிழகத்தில் வீட்டு மனை, குடியிருப்பு ஒதுக்குவதில் ஊழல். அது அம்பலமானால் 'ஜெ. ஆட்சியில் நடக்கவில்லையா?' என்று கேட்கும் முதல்வர், இன்றைய ஊழலை ஒப்புக் கொண்டவராகிறார். இவையெல்லாமே அரசியல்வாதிகளுக்குப் பாடம்; மக்களுக்கு எச்சரிக்கை.

அரசியல் களத்திலிருந்து லஞ்ச-ஊழல் அடித்து விரட்டப்படாவிட்டால், ஜனநாயகத்தை அடித்து விரட்டிவிட்டு சர்வாதிகார சக்திகள் நம் நாட்டைக் கைப்பற்றும் அபாயம் இருக்கிறது. சத்தியத்துக்குக் கட்டுப்படாவிட்டாலும், விஞ்ஞான - தொழில்நுட்ப ஆதிக்கத்தின் ஆற்றலுக்கு அஞ்சியாவது அரசியல்வாதிகள் திருந்த வேண்டும்; ஜனநாயகத்தை அழிவிலிருந்து காப்பாற்ற வேண்டும். ●

● ஜி ஆனி ஜோஸ்பின்



உலகின் நாகரிகமும் பண்பாடும் நதிக்கரைகளிலே தான் செழித்தோங்கின என வரலாறு கூறுகிறது. ஆதியிலே இறைவன் தண்ணீரின் மீது அசைவாடிக் கொண்டிருந்தார் என்று திருமறை கூறுகிறது.

தண்ணீரானது இறைவன் நமக்களித்த கொடை. புவியானது ஏறக்குறைய 70 சதவிகிதம் தண்ணீரால் சூழப்பட்டிருந்தாலும், அதில், மூன்று சதவிகிதமே நன்னீராகும். அதிலும் இரண்டு சதவிகிதம் பனிப்பாறையாய் உறைந்திருக்க ஒரு சதவிகிதமே நமக்குக் குடிக்கக்கூடிய தண்ணீராகும். அந்தத் தண்ணீரை நமக்களிக்கும் பெரும்பாலான நீர்நிலைகள் மாசடைந்துள்ளன. உலகின் நீரானது மாசுபடும் தன்மையுடையது. அந்த நீருக்காக மக்கள் அனைவரும் அலைந்து திரிகின்றனர். தண்ணீரை விலைகொடுத்து வாங்குகிறோம். ஆனால் மாசுபட முடியாத ஜீவ தண்ணீர் இறைவன் அன்புதான்.

'ஊற்றுமய்யா உம் வல்லமையை நான் தாகத்தோடு காத்து நிற்கிறேன்' என்ற பாடலுக்கு ஏங்கி நிற்கும் தாமரை மலரோடு ஆரம்பிக்கிறது ஜீவ தண்ணீர் என்னும் இந்தக் குறுந்தகடு. கவிஞர் வைகை செல்வி என்றும், மாசு கட்டுப்பாடு வாரிய அதிகாரி என்றும் அறியப்பட்ட ஜி ஆனி ஜோஸ்பின் எழுதி இயக்கி உள்ளார். இறைவன் அளிக்கும் ஜீவ தண்ணீருக்காக அனைத்து ஜீவராசிகளும் காத்து நிற்கின்றன என்பதைத் தொடக்கத்திலேயே உணர்த்திவிடுகிறது.

நம் உடலும் உள்ளமும் தண்ணீருக்காக ஏங்குகையில் இயேசு கிறிஸ்து ஒருவன் தாகமாயிருந்தால் என்னிடத்தில் வந்து பானம் பண்ணக்கடவன் என்று அறைகூவி அழைக்கிறார். அவர் அளிக்கும் ஜீவ தண்ணீரைப் பருகுகையில் நமது வாழ்க்கையில் உள்ள பாவங்கள் அசுத்தங்கள் மற்றும் சாபங்கள் அடித்துக்கொண்டு போகும் என்பதைச் சொல்கிறது இந்தக் குறுந்தகடு.

இப்படத்தில் பாஸ்டர் ஜே ப்ராங்க்ளின் மற்றும் முனைவர் ஜி.தங்கராஜின் பிரசங்கம் நெகிழ்ச்சியானவை. 'தாகமுள்ளவன் மேல் தண்ணீரை ஊற்றுவேன் என்றீர். வறண்ட நிலத்தில் ஆறுகளை ஊற்றுவேன் என்றீர்' என்ற சாலன் இசையில் பாடலை பாஸ்டர் பிரின்ஸ் படம் முழுவதும் இடையிடையே பாடியிருப்பது மிகவும் அர்த்தம் பொதிந்ததாக உள்ளது. ஒளிப்பதிவு மற்றும் படத்தொகுப்பு: மா. மணிவண்ணன்.




யதார்த்த வாழ்வில் நாம் அருந்தும் தண்ணீரையும் இறைவன் அருளும் ஆன்மிக அருளையும் ஒப்பிட்டுப் பேசிச் செல்வது நல்ல யுக்தி. நீர் மாசுபட்டுள்ள சமூகச் செய்தியோடு நாம் மனத்தால் மாசு அடையக்கூடாது என்பதையும் சொல்லும் பாணி அருமை.

– சசி

# உங்கள் மங்கையர் மலரில்...

பிப்ரவரி 2011

# 30 வது

## ஆண்டு நிறைவுக் கொண்டாட்டம்!

சின்னத்திரை ஸ்பெஷல்! 'சேனல் சாட்'





புரட்டப் புரட்டப் புதையல்! தங்க மினுக்கு 360!

விவரங்களும், போட்டிக் கூப்பனும் மங்கையர் மலர் டிசம்பர் இதழில்...

அருமையான பம்பர் பரிசு! மிஸ் பண்ணிடாதீங்க!

- போட்டிகள் ஏராளம்!
- பரிசுகள் தாராளம்!
- புத்தம் புதிய வடிவு!
- பளிச் பொலிவு!

அதிக.. அதிக.. அதிகப் பக்கங்கள்

மேலும் விவரங்கள்...?

காத்திருங்கள்...

அடுத்த இதழ் இதே பக்கம்

இதர நீர்த் தாவரங்களைக் காட்டிலும் ஒன்பது மடங்கு நீரை உறிஞ்சி ஆவியாக்கி, நீர் இருப்பினை வெகுவாகக் குறைத்து, நீரோட்டத்தைத் தடுத்து, வெள்ளக் காலங்களில் பெரும் சேதங்களை விளைவிக்கக் கூடியது இந்த ஆகாயத் தாமரை.

Water Hyacinth எனப்படும் இந்த ஆகாயத் தாமரையினை, சிற்சில பகுதிகளில் வெங்காயத் தாமரை என்றும் வெண்ணெய்த் தாமரை என்றும் குறிப்பிடுகின்றனர்.

பிரேசில் நாட்டிலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியான இந்த நீர்வாழ் தாவரம், 1890ல் மேற்கு வங்காளத்துக்குள் நுழைந்தது. ஆகாயத் தாமரை நூற்றியிருபது ஆண்டுகளில் இந்தியா முழுவதுமாகப் பரவிப் படர்ந்துவிட்டது.

பாசன வாய்க்கால், ஏரி, குளம், குட்டையென எல்லா இடங்களிலும் பரவியிருக்கும் இதை புல்டோசர் அல்லது ஜே.சி.பி. எந்திரம் வைத்து, அப்புறப்படுத்தினாலும் சில மாதங்கள் கழித்துப் பார்த்தால் அதே பாசன வாய்க்காலில் முன்பு படர்ந்திருந்தது போலவே நிறைந்திருக்கும். ஆகாயத் தாமரைகளை அடியோடு அழித்தொழிக்க என்னதான் வழி? பல்வேறு கட்ட ஆய்வுகளில் களமிறங்கியது உழவியல் துறை.

இதை அழிக்கும் ஆய்வில், பிரேசில் நாட்டில் இந்த நீர்வாழ் தாவரத்துக்குத் தீங்கு செய்யும் கெட்டினா (Neo Chetina) எனப்படும் பூச்சி வகை எனக் கண்டறியப்பட்டது. அதைக் கொண்டு பெங்களூரு உயிரியல் பூச்சிக் கட்டுப்பாட்டு ஆய்வு நிலையத்தில் இனப்பெருக்கம் செய்யப்பட்டது. நியோ கெட்டினா பூச்சிகள், இந்தத் தாவரங்களைத் தவிர வேறெதையும் உண்ணாது. நியோ கெட்டினா பூச்சிகள் இலைகளை, தண்டுகளை அரித்துத் தின்றுவிடும். மேலும் கற்பூரவல்லி எனப்படும்

# இனி... ஆகாயத்தாமரை அம்பேல்!

ஓமவல்லி இலைப் பவுடரை, சற்றே அரிக்கப்பட்டிருக்கும், ஆகாயத்தாமரைச் செடிகளின் இலைகள் மீது தூவினால் மூன்றே நாட்களில் ஆகாயத் தாமரைச் செடிகள் அதன் வேர்களோடு முழுவதுமாகச் செத்துப் போகிறது. ''இதன் முழுமையான ஆய்வு முறைகளை மத்திய அரசின் தேசிய வேளாண் தொழில் நுட்பத் திட்டத் துறையிடம் சமர்ப்பித்துள்ளோம்!. அரசு ஓ.கே



* இராம. கதிரேசன்



"அரசு ஓ.கே. சொன்னால் ஆகாயத் தாமரை அட்டகாசம் அம்பேல்தான்."

சொன்னால் ஆகாயத் தாமரை அட்டகாசம் அம்பேல்தான்'' என்கிறார் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் உழவியல் துறைத் தலைவர் இராம. கதிரேசன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

✱ தியா

# மகிழ்ச்சியைக் கொண்டாட மதம் எதற்கு?

கிறிஸ்துமஸ் பண்டிகை என்றாலே சந்தேகமே இல்லாமல் குஷிதான். பள்ளிக் குழந்தைகள் விடுமுறையில் இருக்கும் அந்த இனிமையான தருணத்தை மேலும் இனிமையாக்க, சுவையும் ஆரோக்கியமும் கலந்த எளிமையான ரெசிப்பீயைச் சொன்னார் பிரபல சமையல் கலை வல்லுனர், கிருத்திகா ராதாகிருஷ்ணன்: 'இந்த ரெசிப்பீக்குப் பேரு, muddy buddies. 1 கப் வெண்ணெயை நன்றாக உருக்கி அதனோடு ஒரு கைப்பிடி அளவு சாக்லேட் சிப்ஸ் மற்றும் 1 கப் பீனட் பட்டர் சேர்த்துக் கொண்டு நன்றாகக் கலக்கவும். இதனுடன் 2 கப் நெல் பொறியோ அல்லது பொட்டுக்கடலையோ சேர்த்து அதன் மேலாக 2 கப் பொடித்த சர்க்கரையும் சேர்த்து ஒரு டப்பாவில் போட்டு நன்றாக எல்லாம் சேர்ந்து கலப்பதற்காகக் குலுக்கி எடுத்து, ஒரு ஜிப்லாக் கவரில் போட்டு ஃப்ரிட்ஜில் வைத்து விட்டு கிறிஸ்துமஸை சுவையாகக் கொண்டாடலாம்' என்கிறார் கிருத்திகா.



கல்லூரி மாணவிகளின் பார்வையில் கிறிஸ்துமஸ் என்பது எப்படிப் பார்க்கப்படுகிறது என்பதைத் தெரிந்துகொள்ளும் ஆவலில் கோவை கிருஷ்ணா அறிவியல் கலைக் கல்லூரி மாணவி தியாவிடம் கேட்ட பொழுது, 'கிருஷ்ணர் பிறந்த நாளா இருந்தாலும், கிறிஸ்து பிறந்த நாளா இருந்தாலும், எங்களுக்கு ஜாலியோ ஜாலிதான். லீவு கிடைக்குது. டி.வி.யில் நல்ல புரோக்ராம் பார்க்கலாம். அக்கம் பக்கத்து வீடுகள்லேர்ந்து கிறிஸ்துமஸ் பலகாரங்கள் கிடைக்கப் போகுது, லைஃப் எஞ்ஜாய் பண்ண வேற என்ன வேணும் சொல்லுங்க. கிறிஸ்துமஸ்ன்னு சொல்லி, சந்தடி சாக்குல ஒரு புது ட்ரெஸ் கூட வாங்கிக்கற ஸ்மார்ட்னெஸ் இருக்கணும்' என்கிறார் சிரித்தபடியே.





வானத்து நட்சத்திரம் வாசலில் நம்மை புன்சிரிப்போடு வரவேற்க, ஆஹா, கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்துக்குத் தயாராகிக் கொண்டிருக்கும் ஒரு வீட்டுக்குள் வந்து விட்டோம் என்ற ஒரு குதூகலத்தோடு நாம் நுழைந்தது, மெர்சியின் வீட்டுக்குள்.

'மெர்ரி மெர்ரி கிறிஸ்துமஸ், ஹாப்பி ஹாப்பி கிறிஸ்துமஸ்' என மெர்சியுடன் அவரது இரண்டு மகள்களான ஆல்ஃபினாவும், ஆன்லினாவும் சேர்ந்து பாட, கிறிஸ்துமஸுக்கான வெள்ளோட்டமாக, கேக்கைத் தயார் செய்யும் ஜோரில் இருந்த மெர்சியிடம், கேக்குக்கான ரெசிப்பீயைக் கேட்டோம்.

''ரெசிப்பில்லாம் ஈஸியா சொல்லிடலாம். இப்போல்லாம் பாருங்க யாருமே கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்துக்காகன்னு ஸ்பெஷலா எதையும் அவ்வளவா வீட்டுல செய்யறதில்ல, எல்லாமே கடைகள் லேர்ந்து வாங்கி வந்து எல்லாருக்கும் கொடுக்கறாங்க. எல்லாருமே கொஞ்சம் டயட் அது இதுன்னு சொல்றதால, பெரும்பாலும் நாங்க வீட்டுலயே செஞ்சாலும் சரி, வெளியிலிருந்து வாங்கினாலும் சரி, முட்டை சேர்க்காத கேக்குகளைத்தான் சர்வ் பண்றோம். கிறிஸ்துமஸ்னாலே முதல்ல நினைவுக்கு வருவது கேக்குகள் அப்புறம் கிறிஸ்துமஸ் தாத்தாதான். நான் செஞ்சு பாத்துக்கிட்டு இருக்கறது முட்டை இல்லாத கேக்கைதான். நான் இந்த கேக்கை இப்படித்தான் செய்வேன்.

முதல்ல, ஆப்ரிகாட் (apricot) ஒரு கப் நிறைய எடுத்து அதை சோயா பாலில் கேக் செய்வதற்கு முதல் நாள் இரவே ஊற போட்டுடணும். கடைகளில் கிடைக்கும் வட்டமான கேக் டின் ( 15 செ.மீ/ 6 இஞ்ச்) மேல் நெய்யோ எண்ணெயோ தடவி, அந்த டின் மீது துருவிய பாதாம் பருப்பை போட்டு, சூடாக்கப்பட்ட ஓவனின் மீது 8 முதல் 12 நிமிடங்கள் வரை வைக்கணும். மாவு (self raising flour), உருக்கிய நெய், உருக்கிய சர்க்கரை ஆகியவைகளை



* மெர்சி குடும்பம்...



ஒன்றாகக் கலந்து, ஊற வைத்த ஆப்ரிகாட் மற்றும் பாதாம் எசென்ஸ் சேர்த்து 50 நிமிடங்கள் ஓவனில் வைத்து எடுத்தோம்னா, சூப்பரான சுவையான கிறிஸ்துமஸ் கேக் கிடைச்சிடும். கேக்கை உங்க குடும்பத்தினரோடு சேர்ந்து ஒரு வெட்டு வெட்டுங்க'' என்கிறார் மெர்சி.



- நளினி சம்பத்குமார்

# பனியை



**ஸ்ருதிகா, பெருங்களத்தூர்**

'மார்கழி மாதம் தொடங்கிய உடனேயே என் முகம் ரொம்ப வறட்சியாகி விட்டதைப் போல உணர்கிறேன். காலை 6.00 மணிக்கு கல்லூரி பஸ்ஸில் கிளம்பி விடும் எனக்கு, முகத்தை இந்த சீஸனிலும் பொலிவாக வைத்துக் கொள்ள ஆசையாக இருக்கிறது. முகத்தில் பனிக்காலத்தால் தோன்றும் வறட்சித் தன்மையை நீக்க என்ன செய்ய வேண்டும்?

**லைஃப் ஸ்டைல் மேனேஜ்மென்ட் கன்சல்டென்ட் டாக்டர் கௌசல்யா நாதன்:**

''நீங்கள் சொல்வது ரொம்ப சரி, ஸ்ருதிகா. இந்த மாதங்களில் தோல் உரிவது மற்றும் தோல் வறட்சியாக இருப்பது என்பது பலருக்கும் ஏற்படும் ஓர் உபாதை தான். தோலின் மிருது தன்மை மாறாமல் இருக்க, குளிப்பதற்கு, 20 நிமிடங்களுக்கு முன் வாசனைப் பொருள் கலக்காத, சுத்தமான தேங்காய் எண்ணெயை சருமம் முழுவதும் தடவி ஊற வைத்துக் குளிக்கலாம். அதைப்போலவே ரொம்ப சூடாக உள்ள தண்ணீரில் குளிக்கக் கூடாது. அதிக அளவு சூடாக உள்ள தண்ணீர் உங்கள் சருமத்தில் உள்ள எண்ணெய் தன்மையை உறிந்து விடும், அதனால் சருமத்தில் வறட்சி வந்து விடும். குளித்து முடித்த உடனேயே, நல்ல தரமான மாய்ஸரைஸிங் லோஷன் அல்லது பாடி பட்டரை உடல் முழுவதும் தடவிக் கொள்வதால் நமது சருமம் மிருது

உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@ka
ஒரு ஸ்பேஸ் வி

# ரசிக்க பத்து மிளகு!

தன்மையை இழக்காமல் இருக்க வழி செய்யும். உதடுகளில் வெடிப்புகள் வராமல் இருக்க, உதட்டோரங்களில் வெண்ணெய் அல்லது நெய் தடவ வேண்டும்.''

**சிந்தாமணி, ஈரோடு**

75 வயதை நெருங்கிய என் தாயாருக்கு, குளிரைத் தாங்கிக் கொள்ள முடியாமல் ரொம்பவும் கஷ்டப்படுகிறார். அவருக்கு எந்த மாதிரியான உணவு வகைகளை இந்தக் குளிர் காலத்தில் சேர்த்துக் கொள்வது நலம் அளிக்கும்?

**சித்த மருத்துவர் பத்மப்ரியா:**

''இந்தக் குளிர் காலம் என்பது இரவு நீண்ட நேரமும், பகல் என்பது குறைவாகவும் உள்ள ஒரு காலம். அதிகாலையில் பசி எல்லோருக்குமே அதிகமாக இருக்கும். நல்ல சக்தி கொடுக்கக் கூடிய வெல்லம் கலந்த கடலை உருண்டைகள் நமக்குக் குளிரைத் தாங்கிக் கொள்ளக் கூடிய சக்தியைக் கொடுக்கும். சுக்கு, மிளகு சேர்த்து செய்த குழம்பு வகைகள், மற்றும் தூதுவளை, கொள்ளு சேர்த்த சூப் வகைகள் நம் உடம்பில் கபம் ஏறாமல், உடம்புக்குத் தேவையான சூட்டைக் கொடுக்கும். இந்தப் பனிக்காலத்தில், அடிக்கடி ஏற்படக்கூடிய ஒரு தொந்தரவு தொண்டை கட்டுவது. இதைப் போக்க, பத்து மிளகை நெய்யில் வறுத்துப் பொடி செய்து அதைத் தேனில் கலந்து சாப்பிட்டால் மார்கழி பனியை ரசிக்கலாம்.''

**விஜயகுமார், அண்ணா நகர்**

என் பத்து வயது மகனுக்கு அவ்வப்போது wheezing தொந்தரவு வரும், டிசம்பர் மாதம் ஆரம்பித்ததிலிருந்து இது இன்னும் அதிகமாகி விட்டது, ஏன் இப்படி?

**பொது நல மருத்துவர் டி.என்.பாலசுப்ரமணியன்:**

''டிசம்பர் மாதத் தொடக்கத்தில் விட்டுவிட்டு மழை பெய்து கொண்டிருந்ததால், இப்படி ஆகியிருக்கலாம். மழை பெய்து கொண்டிருக்கும் காலத்தைவிட, மழை நின்றவுடன் காய்ந்துபோன தூசு wheezingஐ அதிகப் படுத்தும். காலையில் இருக்கும் பனிமூட்டம் சுவாசக் கோளாறை ஏற்படுத்தும். இதைத் தவிர்க்க, preventer inhaler ஐ பயன்படுத்த வேண்டும். முகத்தை மூடிக்கொண்டு போவது, புகை மற்றும் தூசு இருக்கும் இடங்களுக்குச் செல்லாமல் இருப்பது wheezing கோளாறை அதிகப்படுத்தாமல் இருக்கும்.''

**- நளினி சம்பத்குமார்**



கௌசல்யா நாதன்



பத்மப்ரியா



டி.என்.பாலசுப்ரமணியன்

weekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில், kacli என்று டைப் செய்து உங்கள் கேள்வி, பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.



## அழுத்தம் கொடுக்கும் அழகிரி

'வரும் தேர்தலிலும் அட்டகாசமான வெற்றியை அறுவடை செய்யத் தயாராக இருந்த நிலையில், அலைவரிசை ஊழல் நம்மை ஆட்டம் காண வைத்துவிட்டதே' என்ற கடுப்பில் இருக்கிறார் அழகிரி. ''மக்களை வெறுப்படையச் செய்யக்கூடாது என்று மகன் கல்யாணத்தை நான் அடக்கமாகச் செய்து முடித்தேனே'' என்கிறாராம். ''இனியும் மத்தியில் அமைச்சராகத் தொடர்வதில் அர்த்தமில்லை. அதைத் தூக்கி எறிந்துவிட்டு முழுநேரமும் தமிழகத்தில் - குறிப்பாக தென் தமிழகத்தில் உழைத்தால்தான் வெற்றி'' என்று பதவியைத் தூக்கி எறிய துடிக்கிறாராம். ஆவேசப்படுகிற மகனை ''பொறுமை பொறுமை'' என்று அடக்கி வைக்கிறாராம் அப்பா.

## ராசாவுக்கு தாஜா!



அலைவரிசை ஊழலின் பரிமாணங்கள் ஒவ்வொன்றாக வெளிவர, கலைஞர் குடும்ப உறுப்பினர்கள் கடும் அப்செட்டில் இருக்கிறார்கள். ''ஒருவர் மட்டுமே இத்தனை பெரிய ஊழலைச் செய்திருக்க முடியுமா?'' என்று கேட்டு காங்கிரஸை மிரட்டும் போக்கை முதல்வர் கடைப்பிடிப்பது கண்டு காங்கிரஸும் வெறுப்பில் இருக்கிறது. இந்த நிலையில் சி.பி.ஐ.யிடம் 'எல்லா' விவரத்தையும் ராசா சொல்லிவிடப் போகிறார் என்று சம்பந்தப்பட்டவர்கள் படபடப்பில் இருக்கிறார்கள். கட்சி அவரைக் கைவிடாததற்கு இதுவும் ஒரு காரணம்.

## ஹிட் லிஸ்ட்

'அலைவரிசை ஊழலில் புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்' என்று ஆதாயம் அடைந்த தில்லி, சென்னை அரசியல்வாதிகள் (எதிர்க்கட்சி உட்பட) அதிகாரிகள், பத்திரிகையாளர்கள் ஆகியோரின் எண்ணிக்கை 29.



## வீராப்பு விஜயகாந்த்

'அ.தி.மு.க.வுக்குத் தம்மைவிட்டால் வெற்றிக் கூட்டணிக்கு வேறு வழியில்லை' என்று விஜயகாந்த் கொஞ்சம் கிராக்கி செய்துகொள்வதாக போலீஸ் வட்டாரம் சொல்கிறது. அறுபது இடங்களுக்குக் குறைவாக 'நோ' என்று சொல்லிவந்த விஜயகாந்தை அமுக்கி நாற்பத்தைந்துக்கு ஒப்புக்கொள்ள வைக்க, விஜயகாந்த் வீட்டு தாய்க்குலமே முயற்சி செய்து வருகிறதாம். ''மக்கள் இப்போதிருக்கும் சூழலில் விஜயகாந்த் இருக்கிறாரோ இல்லையோ, அ.தி.மு.க. அணிக்கே வோட்டுப் போடுவார்கள் என்பதை விஜயகாந்த் உணர வேண்டும்'' என்று சொல்கிறார் அ.தி.மு.க. மூத்த பிரமுகர் ஒருவர்.

## அணுகுமுறையை மாற்றும் அம்மா




“**வ**ரும் 30ம் தேதி நடக்கும் அ.தி.மு.க. பொதுக்குழுவில் பல முக்கிய முடிவுகள் எடுக்கப்படும் என்கிறார்கள். இது தேர்தல் பிரசாரத்தின் தொடக்கமாக அமையும்'' என்று சொல்கிறார் அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர். குறிப்பாக அம்மா பிரசார அணுகுமுறையில் மாற்றம் இருக்குமாம். கடந்த தேர்தல்களில் அம்மா சென்னையை விட்டுக் கிளம்பினால், எந்தக் கூட்டணித் தலைவர்களோடும் மேடை ஏறாமல் தனியாகவே தமிழகத்தைச் சுற்றி வந்துவிடுவார். ஆனால் இந்த முறை குறைந்தது பத்து நகரங்களில் கூட்டணித் தலைவர்களோடு மேடையைப் பகிர்ந்து கொள்வாராம். ''மக்களுக்குப் பழைய நினைவுகளைக் கிளப்பாமல் இருக்க, சசிகலாவைக் கூட்டிக்கொண்டு போவதையும் தவிர்க்கலாம்'' என்கிறார் ஒரு அ.தி.மு.க. பிரமுகர். நடக்கக்கூடிய காரியமா அது?

## சுருட்டியவர்களின் எண்ணிக்கை: 29

## முயன்றால் முடியும் தம்பி!



**தே**ர்தல் அறிவிப்புக்குள் இரண்டு வேலைகளைச் செய்து முடிக்க வேண்டும் என்று நினைக்கிறது தி.மு.க. தரப்பு. ஒன்று கலைஞர் வீட்டுவசதி திட்டத்தால் மூன்று லட்சம் பயனாளிகளுக்கு வீடுகட்டி முடிக்க வேண்டும். அடுத்து பெங்களூரு நீதிமன்றத்தில் நடந்து வரும் ஜெயலலிதா சொத்துக் குவிப்பு வழக்கில் தீர்ப்பு வெளிவரச் செய்ய வேண்டும். அலைவரிசை ஊழலுக்குப் பிறகு அதிகாரிகள் மத்தியில் கூட 'தி.மு.க. மீண்டும் ஆட்சிக்கு வருமா?' என்ற சந்தேகம் இருக்கும் நிலையில் அவர்களின் ஒத்துழைப்பு எதிர்பார்த்த அளவு இல்லையாம். இருந்தாலும் அமைச்சர்களை முடுக்கி விடுகிறாராம் முதல்வர்.

- சஞ்சயன்

கூறுகள் அதிகமாகின்றது. பல அறிவியல் உண்மைகளை மக்களிடம் எடுத்துச் செல்வதற்காக ஆன்மிக சாயம் பூசிவிட்டனர். அவற்றுள் இதுவும் ஒன்று.''

**லக்ஷ்மி சேஷன், மதுரை**

அரச மரத்தைச் சுற்றினால் குழந்தை பிறக்குமா?

''நாம் சுவாசிக்கும்போது பிராண வாயு என்னும் ஆக்சிஜனை உள்ளிழுக்கிறோம். காலை நேரத்தில் வாக்கிங் செய்தால் அதிக ஆக்சிஜன் நமக்குக் கிடைக்கின்றது. தாவரங்கள் ஆக்சிஜனை வெளியேற்றுகின்றன. அதிக அளவில் ஆக்சிஜனைத் தருகின்ற மரம் அரச மரம். ஆகவேதான் அது மரங்களின் அரசன் என்று அழைக்கப்படுகின்றது. அதிகாலை நேரத்தில் அரச மரத்தைச் சுற்றி வந்தால் அதிக அளவில் ஃப்ரெஷ் ஆக்சிஜன் கிடைக்கும். அதன் மூலம் ரத்தம் சுத்தமாகும். அதனால் குழந்தை பிறப்புக்குச் சாத்தியக்



**அருணா ராஜாராம், போபால்**

நவக்கிரக படங்களை வீட்டில் வைத்து பூஜை செய்யலாமா?

''அவசியமில்லை.''

**எஸ். பத்மாவதி, சென்னை**

8.12.1980 காலை 10.10க்கு விழுப்புரத்தில் பிறந்த நான் உடல் ஊனமுற்ற பெண். எனக்கு எப்பொழுது திருமணம் நடக்கும்?

''தங்களுக்கு 2015 ஜனவரி வரை சூரிய தசை உள்ளது. மகர லக்னத்தில் பிறந்த தங்களுக்கு இது அஷ்டமாதிபதி



தசை. அடுத்த தசையான சந்திர தசையில் திருமணம் நடக்கும். தங்கள் கணவரும் மாற்றுத் திறனாளியாகவே இருப்பார்.''

**டி.கோவர்த்தன், சென்னை**

நான் பிறந்தது 18.10.1954 பகல் 12 மணி. சென்னை வேலையை ராஜினாமா செய்துவிட்டு சொந்தத் தொழில் தொடங்கினேன். கடந்த 2 வருடங்களாக லாபத்தையே பார்க்கவில்லை. சொந்தத் தொழில் செய்து சம்பாதிக்கும் யோகம் எனக்கு உண்டா?

*''உங்கள் ஜாதகப்படி சொந்தத் தொழில் செய்து நன்றாகச் சம்பாதிக்கும் யோகம் இல்லை. தற்போது கேது தசை நடைபெறுகிறது. மீண்டும் உத்தியோகத்துக்குப் போவதே நல்லது.''*

**எம்.என்.ஜெயராமன், சென்னை- 28**

2.11.1975 அன்று பிறந்த என் மகன் சுவாமிநாதன் அமெரிக்காவில் நல்ல உத்தியோகத்தில் உள்ளான். அவனுக்குத் திருமணம் எப்பொழுது நடக்கும்?

*''அவர் ஜாதகம் நன்றாக உள்ளது. 2011ல் திருமணம் நடக்கும்.''*

# வீட்டில் வேண்டாமே நவக்கிரஹ படங்கள்!




**பரிமளா, வேலூர்**

24.8.1979 வெள்ளிக்கிழமை இரவு 12.35க்கு வேலூரில் பிறந்தேன். அதாவது ஆங்கில தேதிக்கு 25.8.1979 அதிகாலை 00.35. எனக்கு நட்சத்திரம் உத்திரம். சிலர் சிம்ம ராசி என்கிறார்கள். சில ஜோதிடர்கள் கன்னி ராசி என்று கணித்துள்ளனர். எனக்கு ராசி சிம்மமா... கன்னியா? நான் பிறந்தது வெள்ளிக்கிழமையா...சனிக்கிழமையா?

*''நீங்கள் பிறந்தது வெள்ளிக்கிழமைதான். ஆங்கிலேயர்களின் கணக்குப்படி நள்ளிரவில் நாள் ஆரம்பமாகிறது. நமது இந்திய பஞ்சாகப்படி சூரிய உதயத்திலிருந்துதான் நாள் ஆரம்பம். ஆங்கிலத் தேதி 25.8.79 ஆனால் வெள்ளிக்கிழமை பின்னிரவு என்றுதான் சொல்ல வேண்டும். உங்களுக்கு உத்திரம் 2ம் பாதம் கன்னி ராசி.''*

உங்கள் கேள்விகளை ஜாதகக் குறிப்போடு 'பளிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

விவேகா

ஓவியம்: தமிழ்




**ஆ**ஞ்சநேய ஜெயந்தியன்று நண்பன் சூர்யாவுடன் கோயிலுக்குச் செல்லும் பாக்கியம். மக்கள் அலையில் நிரம்பி வழிந்தது வாசற்பகுதி. நிற்பதற்கே இடமின்றி ஒவ்வொரு அடியும் பார்த்துப் பார்த்து வைத்துச் செல்லவேண்டிய நிலை. இதற்கிடையில் பிச்சைக்காரர்களின் ஒரு வரிசை. வாசலின் வெளியே வரிசையில் நிற்கும் முன்பே 'அம்மா, ஐயா...' என்றபடி குரல்கள் எரிச்சலூட்டின.

காலணிகளைப் பத்திரப்படுத்த வேண்டும். கண்ணில் பட்ட இடமெல்லாம் குவியல் குவியலாக தரிசனத்துக்கு வந்தவர்களின் காலணிகள். இத்தோடு பிச்சைக்காரர்களின் தொந்தரவும். சிறிதுநேர அமைதி தேடி கோயிலுக்கு வந்தால், இந்தச் சூழல் எரிச்சலூட்டியது. சகித்துக்கொண்டபடி, காலணியைப் பத்திரப்படுத்த இடம் தேடினேன். எனது நண்பனோ, ''அங்கே போலாம்'' என்றுகூறி ஒரு பிச்சைக்காரனை நோக்கிச் செல்ல, ''இந்தக் காலணிகளைப் பார்த்துக்கங்க'' என்றவாறு கூறிவிட்டு என்னுடையது, அவருடையது, அவருடைய சின்னப்பையன் ஆகிய மூவரின் ஜோடி காலணிகளையும் அவரிடம் ஒப்படைத்துவிட்டு மூணு ரூபாய் கொடுத்தான். அவரும் அதை வாங்கிக்கிட்டு அவருக்கே உரிய குறுகிய முகத்தோடு, ''நீங்க நல்லா யிருப்பீங்க'' என்று கூறினார்.

நாங்களும் வரிசையில் வந்து நின்றோம். எனக்குப் புரியவில்லை. நண்பனிடம் நேரடியாகவே கேட்டுவிட்டேன். ''காலணியைப் பத்திரமா போடணும்னா கடை இருக்கே. அங்கே போட வேண்டியதுதானே. பிச்சக்காரன்ட்ட பார்த்துக்கோன்னு சொல்லிக் கொடுக்கிறியே.. பாக்குறவன் என்ன நினைப்பான்டா''ன்னு அழுத்தமாகக் கேட்க, ''இங்கப் பாருடா.. இந்தக் கோயிலுக்கு நான் அடிக்கடி வருவேன். நான் வரும்போதெல்லாம் அவரப் பாப்பேன். ரொம்ப சாஃப்டா கண்ணுக்குத் தெரிவாரு. அவருடைய சூழல் என்னவோ, பிச்ச எடுக்கணும்னு நிலைமை இருக்கலாம். நம்ம காலணிய திருடக்கூடிய கேவலமான ஆளா எனக்குத் தெரியல. 'உழைச்சு வாங்குன காசு'ன்னு மனுஷருக்குத் திருப்தி வரும்னுதான் எனக்குத் தோணுது'' என்று புன்னகைப் பேச்சுடன் கூற, ''அட போப்பா... உழைச்ச

# நிமிடம்!

வாங்கன காசன்னு திருப்தி வருமா. நம்ம செருப்ப பாத்துக்கற டைம்ல அவன் 'ஐயா.. அம்மா...'ன்னு சொல்லியே சில்லறைய சேத்து நோட்டாக்கிடுவான். இவனுகளயெல்லாம் கண்டுக்காம நாம பாட்டுக்குப் போயிட்டே இருக்கணும். இன்னிக்கு நாம செப்பல போட்டதால அவரு ஃப்யூச்சர்ல பிஸினஸ்மேன் ஆகப் போறாரா என்ன? கடைசிவரைக்கும் பிச்சதான் எடுக்கப் போறாரு. ம்ஹும்... கோயிலுக்கு வந்து பிச்சக்காரன் பேச்செல்லாம் எடுக்க வேண்டியிருக்கு. இன்னிக்கு இப்படிலாம் நடக்கணும்னு எழுதி வச்சிருக்கோ... என்னவோ... அவனுக்குத்தான் தெரியும்'' என்று முன கல் பேச்சோடு முடித்துக்கொள்ள, சிறு நமட்டுச் சிரிப் போடு அதைப் பெரிதுபடுத்தாமல், சூர்யாவுடன் க்யூ வில் முன்னோக்கி நடக்கத் தயாரானேன்.

கூட்டத்தில், சற்றும் எதிர்பாராத சமயம், சூர்யாவின் மகன் கையிலிருந்த பலூன் கை நழுவி க்யூவை விட்டு வெளியே செல்ல, பலூனைப் பிடிப்பதற்காக, ஜன நெருக்கடி நிறைந்த ரோட்டினைச் சிறுவன் கிராஸ் பண்ண, எதிரே பைக்கில் வந்தவன், சிறுவனின் மீது மோத இருந்ததைப் பார்த்த மறுகணமே, எதையும் பொருட்படுத்தாமல், தமது கையில் சிறு சிராய்ப்புகளு டன் சிறுவனைக் காப்பாற்றினார் அந்தப் பிச்சைக்காரன். மயிரிழையில் நடந்த சம்பவம் சிறிது நேரம் அந்த இடத்தையே ஒரு நிமிடம் ஸ்தம்பிக்க வைத்தது. இதைக் கண்ட நாங்கள் இரு வரும் திடுக்கிட்டுக் குழந்தையை நோக் கிச் சென்று அணைத் துக்கொண்டோம்.

பைக்கில் வந்தவனோ, ''தவறு என்னோடதுதான். இவ் வளவு கூட்டம் இருக்கும்போது கொஞ்சம் மெதுவா வந்திருக்கணும், நானும் அவசரப்பட்டுவிட்டேன்'' என்று நடந்ததற்கு மன்னிப்பு வேண்டினான். நண்பனும், தவறை ஒத்துக்கொண்ட அந்த நபரைப் பழி சொல்லி விஷயத்தைப் பெரிதுபடுத்த விரும்பவில்லை. குழந்தை காப்பாற்றப்பட்டாலும், நண்பனுக்கு ஒரு சிறு கவலை. காப்பாற்றிய அந்தப் பிச்சைக்காரனுக்கு அடிபட்டு விட்டதே என்று.

''இந்தக் காச வச்சுக்கங்க... உங்களுக்கு அடிபட்டி ருக்கு'' என்று அந்தப் பிச்சைக்காரனிடம் பணத்தை நீட்ட, ''வேணாம் சார்... இந்தக் காயம் எங்களைப் போல உள்ளவர்களுக்கு நாளடைவில தன்னால ஆறிடும். ஒரு பிச்சைக்காரனா இருந்த என்ன நம்பி உங்க காலணிகளப் பாதுகாக்கிற ஒரு வேலையைக் கொடுத் தீங்க. என்னதான் இது கௌர வமான வேலை இல்லன்னா லும்கூட, பிச்ச எடுக்கறதவிட இது 100 மடங்கு கௌரவமான வேலதான். 'என்ன நம்பி'ங்கிற வார்த்தைக்குத் தகுதியுடை யவனா என்ன பாத்திருக்கீங்க. உங்களப் பாத்து இன்னும் ஒரு இரண்டு பேர் 'என்ன நம்பி' காலணிகள ஒப்படைப்பாங்க. இப்படியே நான் வளர்றதுக்கு வாய்ப்பாகவும் இருக்கலாம். உங்க குழந்தைக்கு ஏதாவது ஒண்ணுன்னா பாத்துக்கிட்டு சும்மா இருக்க முடியுமா? 'நம்ம பையன ஒரு பிச்சக் காரன் காப்பாத்துற நிலைமை வந்துருச்சே'ன்னு நீங்க வருத் தப்பட்டா என்ன மன்னிச்சி டுங்க சார்'' என்றபடி அந்த ஜென்டில்மேன் முழு மூச் சாகப் பேசி முடித்தார்.

''ஐயய்யோ, உண்மையி லேயே உங்களுக்கு நான் நன்றி சொல்லணும். உண்மை யிலேயே நீங்க வாழ்க்கையில நல்ல நிலமைக்கு வருவீங்க'' என்று சூர்யா நெகிழ்ந்து கூற, ஒன்றும் நடக்காத பாவனை யில் வெட்கத்தைச் சுமந்தபடி கோயிலைவிட்டு வெளியே வந்தேன்.

நெஞ்சைப் பிளந்து காட் டிய ஆஞ்சநேயர் ரூபம் ஏனோ மீண்டும் நினைவில் வந்து போனது.

✸

## ராஜாஜி நினைவுநாள் எண்ணவோட்டம்
(டிசம்பர்-26)




# ஸி.ஆரின்

**1947** மத்தியில் ஸி.ஆருக்கும் காஸா சுப்பராவுக்கும் இடையில் நடந்த ஒரு கடிதப் போக்குவரத்து ஸி.ஆரின் குணச் சித்திரத்தை நமக்குப் 'பளிச்'சென்று எடுத்துக்காட்டுகிறது. ஸி.ஆரிடம் நெருங்கிப் பழகியிருந்த காஸா, ஸி. ஆரை விட வயதில் பல ஆண்டுகள் சிறியவர். 'சுதந்திரா' என்ற பத்திரிகையை அவர் நடத்தி வந்தார். பிரகாசத்தின் தீவிர ஆதரவாளர் காஸா.

சென்னை மாகாணத்தின் முதல்வர் பதவி பிரகாசம் கையிலிருந்து ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் கைக்கு மாறியது. அந்த மாறுதலின் பின்னணியில் ஸி.ஆரின் பங்கும் இருந்தது என்பதாகப் பேசப்பட்டதை அப்படியே ஏற்று, ஸி.ஆரைக் கடுமையாகத் தமது பத்திரிகையில் தாக்கினார், காஸா. ஸி.ஆரைச் 'சூழ்ச்சி புரிகிறவர்' என்றும் 'பதவி ஆசை உள்ளவர்' என்றும், அதிலும் குறிப்பாக 'சென்னை மாகாண முதல்வர் பதவியை மிகவும் விரும்புகிறார்' என்றும் குறிப்பிட்டிருந்தார். இதைப் படித்துவிட்டு ஸி.ஆர், காஸாவுக்கு ஒரு தபால் கார்டு எழுதினார்.

''அன்புள்ள காஸா, உங்களுடைய இலவசப் பிரதிகள் பட்டியலிலிருந்து என் பெயரை நீக்கிவிடவும். எனக்கு அனுப்பப்பட்டு வரும் சுதந்திரா இதழை மிச்சம் பிடிக்கவும்.''

காஸா, ஸி.ஆரின் விருப்பப்படி தாம் நடப்பதாகப் பதில் எழுதினார். அத்துடன் நில்லாது மேலும் சில வரிகளும் சேர்த்தார். ''நமது தலைவர்கள் பதவியிலும் அதிகாரத்திலும் உயரும்போது அவர்கள் விமர்சனத்தைத் தாங்க முடியாமல் தவிப்பதும் அதனை வெறுப்பதும் நமது தேசத்தின் துரதிர்ஷ்டம். உங்கள் தபால் கார்டு மூலம் நீங்கள் வெளிக்காட்டியுள்ள அற்பக் கோபத்தைச் சீக்கிரமே நீங்கள் வெற்றி கொண்டு உயர கடவுளைப் பிரார்த்திக்கிறேன்!''

ஸி.ஆர். பதிலளித்தார்:

''நான் சகிப்புத்தன்மை அற்றவன் அல்ல.

அதற்கு நேர்மாறானவன். நீங்கள் உங்களுடைய மனச்சாட்சிக்கு மதிப்பளிக்காமல் அதனை ஒதுக்கிவிட்டு, என்னைப் பற்றி உண்மையல்லாத விஷயங்களை எழுதுவதைப் பார்த்தபோதுதான் எனக்குச் 'சீ' என்று போய்விட்டது. நீங்கள் பிரார்த்தனை பற்றிப் பேசுகிறீர்கள். உங்களுக்காக என்னைவிட அதிகமாகப் பிரார்த்திக்கும் ஒருவனை உங்களால் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. உங்களுக்கு மாறி மாறி நல்லதிர்ஷ்டங்கள் ஏற்பட்டால் ஒவ்வொரு திருப்பத்திலும் என்னைவிட அதிக மகிழ்ச்சி அடையும் வேறு ஒருவர் இருக்க முடியாது. இது சத்தியம்.''

இதற்குக் காஸா, ''நல்லதிர்ஷ்டம் என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். நான் இந்தக் கட்டத்தில் நல்லதிர்ஷ்டம் என்று கருதக்கூடியது, தங்களுக்கு மறுபடியும் சுதந்திரா பிரதிகளை அனுப்பி வைக்கலாம் என்று நீங்கள் எனக்குக் கோடி காட்டுவதுதான்'' என்று பதிலெழுதினார்.

ஸி.ஆரின் பதில்:

''அன்புள்ள காஸா, உங்களுடைய

# குணச்சித்திரம்

சிறிய இனிய கடிதம் கிடைத்தது. உங்கள் விமர்சனம் என்னைப் புண்படுத்தவே இல்லை. விமர்சனத்துக்கு அப்பாற்பட்டு நீங்கள் எழுதியிருந்த வார்த்தைகள்தாம் என் மனத்தை நோகச் செய்துவிட்டன. என்ன எழுதியிருந்தீர்கள் என்பது வார்த்தைக்கு வார்த்தை சரியாக நினைவில்லை. ஆனால் விஷயம் மறக்கவில்லை. 'நான் கீதையைப் பற்றி அறிவுபூர்வ விளக்கவுரைகளை வழங்கிக்கொண்டே செயலில் அதனைப் புறக்கணிக்கிறேன்; இதன் மூலம் புனித கீதையை நான் இழிவான காரியத்துக்குப் பயன்படுத்துகிறேன்' என்பதாக எழுதியிருந்தீர்கள்.

எனக்குச் சென்னை முதல்வர் பதவி மீது அவ்வளவு ஆசை என்றும் அதற்காகப் பிரகாசத்துக்கு எதிராக நான் சூழ்ச்சி செய்தேன் என்றும் நீங்கள் கற்பனை செய்து கொண்டீர்கள். இன்னமும்கூட அத்தகைய கற்பனையில் நீங்கள் இருக்கலாம். (ஆண்டவன் உங்களை மன்னிக்கட்டும்!) இதுதான் என் மனத்தை மிகவும் காயப்படுத்திவிட்டது. கடவுளுக்கு என் உள்ளம் தெரியும். நிஜமாகவே நீங்கள் எனக்குப் பெரிய தவறு இழைத்துவிட்டீர்கள்.

உங்களுக்குப் பிரகாசம் மீது அபரிமித அன்பு. அந்த அன்பு உங்களைத் திசை தவறி நடக்கச் செய்கிறது. பாதகமில்லை. உங்களுக்கு என் மீதும் துளி அளவு அன்பு இருக்கிறது என்பதைக் காண்கிற வரை நான் வருத்தப்பட மாட்டேன். இந்தக் கணத்தில் சிறிதளவு அல்ல, என் மீது உங்கள் அன்பு பெருமலையாகக் குவிக்கப்படுவதையே காண்கிறேன்.''

பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ஸி.ஆரின் மிகுந்த விசுவாசமுள்ள, சக்திமிக்க நண்பர்களில் ஒருவராகி அவருடன் மனத்தாலும் கருத்தாலும் எழுத்தாலும் ஒன்றினார் காஸா.

**(வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள கல்கி ராஜேந்திரன் தமிழில் மொழிபெயர்த்த 'ராஜாஜி வாழ்க்கை வரலாறு' என்ற நூலிலிருந்து)**




# தினமணி தலையங்கங்கள்

**நா**ளேட்டின் ஆசிரியருக்குத் தலையங்கம் என்பது வலிமை மிக்க ஆயுதம். மக்கள் நலன், நாட்டு நலன், அதையும் தாண்டி உலக நலன் என்ற மூன்று குறிக்கோள்களுடன் தம் கருத்தை தினம் தினம், அழுத்தம் திருத்தமாகப் பதிவு செய்தாக வேண்டும். அதில் உண்மை இருக்க வேண்டும்; அதற்கான ஆதாரம் இருக்க வேண்டும். கடைநிலை வாசகரும் புரிந்துகொள்கிற எளிமை இருக்க வேண்டும். தலையங்கம் வெளிப்படுத்தும் நிலை சரியா, தவறா என்ற சிந்தனையை வாசகரிடம் தூண்ட வேண்டும். 'உண்மை தெரிந்தது சொல்வேன்' மூன்று தொகுதிகளும் இவற்றுக்கு உதாரணமாக இருக்கின்றன.

'மானுட சமுதாயத்தின் பிரதிநிதியாக, மக்கள் பிரச்னைகளுக்காகக் குரல் கொடுக்க நான் தலையங்கத்தைப் பயன்படுத்துகிறேன்' என்று ஆசிரியர் கே.வைத்தியநாதன் கூறியிருக்கிறார்.

ஆசிரியருக்குத் தலையங்க விஷயங்களுக்குப் பஞ்சமே இல்லை. தன்னார்வத் தொண்டு நிறுவனங்களின் செயல்பாடுகளில் மறைந்திருக்கும் சுயநலம்; அரசு நடத்தும் பள்ளிகளின் கல்வித்தரம், சிறைத்துறை மாற்றங்கள், அரசின் சட்டமீறல்கள், விவசாயிகள் பிரச்னையில் போதிய கவனம் இன்மை, பொது விநியோகக் குறைபாடுகள், நீதி மன்றங்களில் வழக்குகள் தேக்கம், நாடாளுமன்ற அமளிகள், ஆசிரியர்கள் பற்றாக்குறை என்று தினத்துக்கு ஒன்று கிடைத்துவிடுகிறது, தம் கருத்தைச் சொல்ல.

சில தலையங்கங்கள் தமிழக வாசகர்களுக்குச் சம்பந்தம் இல்லாததாக இருக்கலாம்; சில, இப்போது படிக்கிறபோது காலாவதி ஆகிப்போன மருந்தாக இருக்கலாம். ஆனால் அவை எழுதப்பட்ட காலத்தில் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்திற்று என்பதே முக்கியம்.

முடிவு வரிகளில் அழுத்தம் காண்பிப்பதைப் பாராட்டியிருக்கிறார் ரா.கி.ரங்கராஜன். (எடுத்துக்காட்டு : 'சமுதாயம் தான் ஏற்றுக் கொள்ளலாம் என்பதைத்தான் ஏற்றுக் கொள்ளுமே தவிர, ஏற்றுக் கொள்ளச் சொல்வதை எல்லாம் ஏற்றுக் கொள்ளாது - உதாரணம்: இறை மறுப்புக் கொள்கை!) அரசியல் தவிர, பிற விஷயங்களையும் அறிந்தவர் என்று சோ பாராட்டியிருக்கிறார். நன்கு ஆராய்ந்து, சிந்தித்து எழுதுகிறார் என்று தட்டிக் கொடுக்கிறார் 'கல்கி' ராஜேந்திரன்.

'ஒரு விஷயத்தை விளக்கமாகச் சொல்வது என்பது மதிப்பு மிக்க திறமை' என்று டைம்ஸ் இதழின் தாமஸ் ஃப்ரீட்மேன் கூறியிருப்பதை கே.வைத்தியநாதனின் 'தினமணி' தலையங்கத் தொகுப்புகள் உறுதி செய்கின்றன.

*உண்மை தெரிந்தது சொல்வேன்: (தொகுதிகள் 1, 2, 3) ஆசிரியர்: கே.வைத்தியநாதன், விலை: ஒவ்வொன்றும் ரூ.200/- கலைஞன் பதிப்பகம், 19, கண்ண தாசன் சாலை, சென்னை - 600 017.*

Ph: 044 - 2434 5641, 2431 3221

**- சாருகேசி**

# அருள்வாக்கு

# திருப்பணி



அநாதைக் குழந்தைகளின் ஸம்ரக்ஷணை, திக்கற்ற ஏழைகளுக்கு ஸேவாஸதனம் வைப்பது, ப்ராணி வதையைத் தடுப்பது, பசு வளர்ப்பது, பசிக் கஷ்டம் யாருக்கும் வராமல் உபகரிப்பது என்றிப்படி எந்தெந்த விதத்தில் முடியுமோ அப்படி நம் அன்பை, வெறும் பேச்சாக இல்லாமல், கார்யத்தில் காட்டினால் பரமேச்வரனின் அன்பு நமக்கும் கிடைக்கும்.

ஈச்வராநுக்ரஹம் எங்கேயும் ப்ரவாஹம் மாதிரி ஓடிக்கொண்டேதான் இருக்கிறது. ஆனால் நம் மனஸ் கல்லாக இருந்தால், கல்லுக்குள் ஜலம் ஊறாத மாதிரி அநுக்ரஹத்தை நம்மால் தெரிந்துகொள்ள முடிவதில்லை. அதுவே ஒரு துணியை வெள்ளத்தில் போட்டால் அது தானே விரிந்து ஜலத்தை இழுத்துக் கொள்கிறது. துணியை வெளியே இழுத்துப் பிழிந்தால் ஜலம் கொடுக்கிறது. கல் மனஸைப் பரோபகாரத்தில் இப்படி இலேசாகத் துணி மாதிரி ஆக்கிக் கொண்டால் எப்போதும் நம்மைச் சூழ்ந்திருக்கிற அநுக்ரஹத்தை நன்றாக உறிஞ்சிக் கொள்ளலாம். ஜீவனுக்குச் செய்கிற பெரிய உபகாரம் அவனுக்குக் கருணாமூர்த்தியான ஈசனிடம் பிடிப்பு ஏற்படுத்தித் தருகிற திருப்பணிதான்.

பணி என்றால் ஸர்வீஸ். ஸ்கூல் வைப்பது, ஆஸ்பத்திரி கட்டுவது, ஜல வஸதி பண்ணித் தருவது எல்லாம் ஸர்வீஸ்தான். நாம் ஸோஷல் ஸர்வீஸ் - ஸமூஹப் பணி - என்றாலே இதுகளைத்தான் நினைக்கிறோம். ஆனால், இந்தப் பணியெல்லாம் இறை பணியில் கொண்டு சேர்த்தால்தான் நிறைவுள்ளதாகும் என்று நமக்குப் புரிய வைக்கிறதற்காகத்தான் ஈச்வர ஸம்பந்தமான பணிக்கே 'திரு' என்று அடைமொழி கொடுத்து 'திருப்பணி' என்று பேர் வைத்திருக்கிறார்கள். 'திருப்பணி' என்கிற வார்த்தை எல்லா ஸர்வீஸுக்கும் உச்சி அதுதான் என்று அர்த்தம் கொடுக்கிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர**
**சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**



வையவன்

திரும்பிப் போக வேண்டிய நாட்கள் நான்கு மூன்று இரண்டு என்று குறைந்து வரவர எல்லா வற்றின் மீதும் ஒரு பற்றுதல் கூடுகிறது. பாரதி காலனி மீது. நாலாவது தெருவின் மீது. பீட்டரின் சைக்கிள் மீது கூடத்தான். அது சப்-இன்ஸ்பெக்டர் சுலைமான் வீட்டுக்கு எதிரில் நின்றிருந்தது. ஜாஸ் மின் அதை ஒரு பழங்காலக் கலைப்பொருளை ரசிக்கிறபடி ரசித்தாள்.ஸ்டாண்டு போட்டு நிறுத்திய பழைய சைக்கிள். ஓட்டை சைக்கிள் என்று சொல்லமுடியாது. ஆனால் மூத்து முதிர்ந்துவிட்டது. ரிம்,சைக்கிள் செயின், ஸீட், மட்கார்ட், ஹாண்டில் பார் என்று சகல பார்ட்ஸ்களிலும் அதற்கு ஆன வயதின் சின்னமும் அது ஓடிய ஓட்டங்களின் கணக்கும் ஒரு பெருமூச்சோடு பதிவாகியிருந்தது. அதில் தான் சிறிய வயதில் மகள் எலிசபெத் கற்றுக் கொண்டாள். பால் பாக்கெட் போடாத நேரத்தில் பீட்டர் கற்றுக் கொடுத்தான்.

ஜாஸ்மின் வாக்கிங் வருகையில் இரண்டாவது தெரு முனை திரும்பியதுமே பீட்டர் தெருக்கோடி வீட்டு வாசலில் இருந்து அவளைப் பார்த்துவிட்டுக் கை உயர்த்தி ஒரு சல்யூட் செய்தான். பதிலுக்கு அவளும் அதே பாணி சல்யூட் வணக்கம் செய் தாள்.

அவன் சிரித்தான்.

ஜாஸ்மினும் சிரித்தாள்.

சிரிப்பது தான் அவன் ஒளி. 'என் ஒளியை ஏன் இழக்க வேண்டும்? எதுவாவது வந்து எதையாவது கொண்டு போகட்டுமே. என்னுடையதை நான் ஏன் இழந்து போக வேண்டும்?'

அவன் சிரிக்கும்போது இந்தக் கேள்வியே கூடச் சேர்ந்து சிரிப்பதாக அவளுக்குத் தென் படும்.

கொண்டை ஊசி வடிவமைப்பில் அமைந்த ஆறு தெருக்கள் பாரதி காலனியில். இந்தக் கடைசிக்கும் அந்தக் கடைசிக்கும் மடிந்து மடிந்து போகும்... போகும்... போய்க் கொண்டே இருக்கும். அதில் நடந் தால் ஒரு அதிகாலை வாக்கிங்குக்குப் போதும். மூச்சு இரைக்கும் முடி வில்.

அந்தத் தெரு முடிந்து மறு திருப்பத்தில் திரும்பினால் பீட்டர் நான்காவது தெரு முதல் வீட்டில் செகண்ட் ஃப்ளோரில் ஒரு ப்ளாட்டில் பால் போட ஏறிக்கொண்டிருந்தான். கிடுகிடுவென்று ஒரு மின்னல் நடை தான். இப்படி ஒரு ஃப்ளோர் ஏறி இறங்க பீட்டருக்கு எவ்வளவு நேரம் ஆகும்?

கணக்குப் போட்டுக் கொண்டே நடந்தாள். அப்போதுதான் சப்-இன்ஸ் பெக்டர் சுலைமான் வாக்கிங் வந்தார். கூட அல்ல;எதிரில். மப்ளர் சுற்றிக் கொண்டு, எதிரில் வந்த ஜாஸ்மினைப் பார்த்துவிட்டு நின்றார். இந்த விடு முறை முழுவதும் அவரை இப்போது தான் முதல் முறை சந்திக்கிறோம் என்ற எண்ணம் உள்ளே ஓடியது.

"இது மாதிரி ஜித்தாவிலே

காலையிலே வாக்கிங் போக முடியாது இல்லே?''

இருவரும் டிசம்பர் குளிரில் வீதி நடுவில் வீடு வீடாக சைக்கிள் தள்ளி ஒடுகின்ற பீட்டரைப் பார்த்தபடி நின்றனர். அந்த டிசம்பர் குளிர் எந்த மூலை என்று சவால் விடுகிற மாதிரி இனிய சங்கீத ஓசை காற்றில் மிதந்து வந்தது.

கிறிஸ்துமஸ் வருகைக்காக பாரதி காலனி லிட்டில் ஃப்ளவர் ஆர்க்கெஸ்ட்ரா பஜனைக் குழு, காலனியை ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு வருவார்கள். ஹார்மோனிய வாசிப்பில் 'அருள் தாரும் தேவ மாதாவே ஆதியே இன்ப ஜோதியே' என்று ஒரு பாட்டு உருகிற்று.

இது எங்கே கிடைக்கும் ஜித்தாவில்? கேள்வி கொக்கி அவன் மனத்துக்குள்.

''அது மட்டுமில்லே. இப்படி பீட்டர் மாதிரி தெருத்தெருவா சைக்கிள்லே சுத்தி வீடுவீடா பால் பாக்கெட் போடறவங்க... அப்புறம் விடிகாலை வாக்கிங்லே ஒரு பொம்பளையை நடுத் தெருவிலே நிக்க வச்சுப் பேசறவங்க... இப்படி ஒண்ணும் நடக்காது'' ஜாஸ்மின் உதடு மென்றபடி சொன்னாள்.

''பால் பாக்கெட்டைக் கொண்டுவந்து வீட்டிலே போடறது நம்ம நகரத்துக் கலாசாரம்.'' அவர், அவளது இரண்டாவது கமெண்டைத் தவிர்த்தபடி சொன்னார்.

''அதுலயே ஒரு வாழ்க்கை நடந்துடுதே?'' ஜாஸ்மின் சுட்டிக்காட்டினாள்.

சொல்லும்போதே அப்படி ஒரு வாழ்க்கை நடந்து அதில் ஓர் ஊனமும் விழுந்த அவலம் மூடியிருந்த நாடார் கடைப்



படிக்கட்டில் சுருண்டு படுத்திருந்த நாய் ஊளையோடு சேர்ந்து நினைவில் வட்டமிட்டது.

பீட்டர் மூன்றாவது தெரு முனையில் அவர்கள் நிற்பதைப் பார்த்துவிட்டு இருவருக்கும் தனித்தனியாக இரண்டு சல்யூட் அடித்தான். சிரித்தபடியே சைக்கிளைத் தள்ளித் தாவி ஏறிக்கொண்டு மீண்டும் பறந்தான்.

''அவனுக்கு எல்லாம் தெரியும்லே...?''

ஜாஸ்மினின் கண்கள் சுருங்கி, நெற்றி மேலே ஏறியது. 'இது வெட்டிக் கேள்வி தானே !' என்ற தோரணையில். அவள் நெற்றி மேலேறிச் சுருங்கி, கண்கள் இடுங்கித் தனி அழகு தலை காட்டும். இன்னொரு முறை பார்க்க வேண்டும் போல.

அவள் நெற்றிச் சுளிப்பைப் பார்த்துவிட்டு சுலைமான் நாணப்பட்டு அவசரமாய்ச் சொன்னார்.

''இந்தக் காலனியிலே நம்ம ரெண்டுபேரை ஒண்ணாச் சேந்து பார்த்தா நம்மாளுங்களுக்கு நாக்கு அரிக்கும். அதுக்காகச் சொன்னேன்.''

''சுலைமான் .. .. பீட்டர் தனி ..நம்மாள்லே சேத்தியில்லே....''

சமயத்தில் ஜாஸ்மின் அவரைப் பெயர் சொல்லி அழைப்பாள். அது உறவின் எல்லா நூலிழைகளும் முற்றிலும் அறுந்துவிடவில்லை என்று உணர்த்தும்.

'அதோட நான் பாட்டி ஆயிட்டேன்.' எது எதையோ அதனதன் எல்லையில் நிறுத்தச் சொன்னாள். சுருக்கமாக. முத்தாய்ப்பாக. ஆனாலும் சொன்னபின் நாக்கைக் கடித்துக் கொள்ளத் தோன்றியது. சொல்லி இருக்க வேண்டாமே!

காரணம் சுலைமான் இன்னும் தாத்தா ஆகவில்லை.

மகள் ஆயிஷா திருமணம் முடிந்து நாலு வருஷமாகியும் குழந்தை இல்லை. மனிதராய்ப் பிறந்துவிட்டால் ஏக்கம் ஏதோ ஒரு வடிவில் கூடு கட்டி எந்தப் பறவையின் வருகையையோ எதிர்பார்த்துக் காத்திருக்கிறது. ஒரு தோல்விக்கு ஒரு தோல்வி காரணம் என்று குற்றம் சாட்டிக் கொண்டு ஒன்று போனால் மற்றொன்று எனத் தேடிக்கொண்டேயிருக்கிறது.

பீட்டர் ஒரு சிறுநகை காட்டி அவர்களைக் கடந்து மூன்று வீடு தள்ளிப் படியேறினான். பால் கவர்களோடு.

இவன் மனத்தில் எந்தக் கூடு?

''ஜாஸ்மின் .. உனக்கு ரொம்ப தைரியம்!''

''எதுக்குச் சொல்றே? ''

''நாப்பத்து மூணு வயசிலே பாட்டின்னு சொல்லிக்கிறியே! ''

''பாட்டியான பிறகு பாட்டிண்ணு சொல்லிக்காம வேற என்ன சொல்லிக்கறதாம்?''




அவள் நறுக்கென்று நக்கலாகக் கேட்டாள். எனினும் அதில் தொனித்த அழகை ரசித்தபடி சுலைமான் அவளைப் பார்த்தார். அவரை இரக்கமாகப் பார்த்தாள்.

''சுலைமான்... நீ ஆம்பளே! உனக்குத் தெரியாது. ஒரு பொம்பளை ஒவ்வொரு பந்தத்திலேயும் ஒரு நிறை வடையறா. ஒண்ணை இழந்துட்டா



இன்னொன்னைக் கண்டுபிடிச்சு தன்னைப் பூர்த்தி பண்ணிக்கறா. பின்னமா நின்னுடறதில்லே. எதுவாவது பின்னமா நின்னிட்டிருந்தா அதை என்ன செய்து எப்படிப் பூர்த்தி பண்ணலாம்னு யோசிக்கறா!''

பேச்சு தடம் மாறி வேறு ஏதோ பிளாட்ஃபாரத்துக்குப் போவது போல கலைமானுக்குப் பட்டது. அதை அவர் விரும்பவில்லை. அவரோ அவளோ மறுபடி பழைய வெட்டுக் காயங்களைக் கீறிப் பார்த்து ரத்தம் சொட்டுவதை ரசிப்பவர்கள் இல்லை.

**பீ**ட்டர் தெருமுனையில் கடைசி வீட்டில் பால் பாக்கெட்டைப் போட்டு எதிரில் திரும்பி வந்தான். பல்லெல்லாம் தெரிய சிரித்துக்

''கட்சியில் உங்க செல்வாக்கு ஒரேயடியா சரிஞ்சிருக்குனு எதை வச்சு சொல்றீங்க?''

''நம்ம மகன் கல்யாணத்துக்கு வந்த மொய்யை வச்சுத்தான்!''

- உ. ராஜாஜி

கொண்டு அவர்கள் எதிரில் சைக்கிளை நிறுத்தி இறங்கினான்.

''நர்ஸம்மா இந்த வருஷம் இங்க இல்லே போலிருக்கே?''

''யாரு சொன்னது?''

''ஜென்ஸி தான்.''

ஜாஸ்மின் பேத்தியை நினைத்துக் கொண்டாள். இரண்டு முடிவதற்குள் கொள்ளு கொள்ளு என்று பேசியபடி, பாட்டி பேட்டி பூட்டி எனப் பாட்டுப் பாடி நாட்டியமாடியவாறு எந்த உடுப்பைப் போட்டாலும் கழற்றிப் போட்டுவிட்டு சுதந்திரப் பறவை போலச் சுற்றித்திரிகிற அந்தச் சுட்டித்தனம் மனத்துக்குள் பரவச ஊற்றைத் திறந்தது. அதற்கும் ஒரு கெடு. நாளை மறுநாள் வரை.

''என்ன சொன்னா?''

''ரொம்ப வருத்தம் அதுக்கு''

''பாவம் கொழந்தே! லீவ்னா என்னா டூட்டின்னா என்னான்னு அதுக்கு எப்படித் தெரியும்?''

பீட்டர் அவளை ஒரு மதிப்போடு பார்த்தான்.

''நர்ஸம்மா எப்ப பொறப்படறீங்க?''

''நாளைக்கு மறுநாள்.''

''மறுபடியும் அடுத்த வருஷமா?''

''மாதா கிருபை. கர்த்தர் சித்தம்.''

''வேளாங்கண்ணிக்குப் போகணும்னு சொன்னீங்களாம். அதுக்கும் போக முடியலேன்னு எலிசபெத் சொல்லுச்சு.''

மகள் எலிசபெத்திடம் லீவில் வருவதற்கு முன் எத்தனை திட்டம் போட்டாலும் நாலைந்தாவது தவறிப்போகிற விநோதத்தை நேற்றுதான் பகிர்ந்து கொண்டாள்.

''டைமே கெடைக்கலே பீட்டர். அங்கே போறது இங்க போறது... அந்த வேலை...இந்த வேலை... இப்படியே பதிமூணு நாளும் ஓடிப்போச்சு.''

''வர்றேன் நர்ஸம்மா. மறந்துடாதீங்க.'' பீட்டருக்கு அதற்கு மேல் நிற்க நேரமில்லை.

உதடு பிரித்துச் சிரித்து அவன் விடைபெற்றான்.

சைக்கிள் அடுத்த தெரு முனையில் மறைந்ததும் கலைமான் அவளைப் பார்த்தார்.

அவர் எதற்குப் பார்க்கிறார் என்று உணர்ந்து கொண்டது போல ஜாஸ்மின் கண்ணிமைகளை மூடி ஓசை வருகிற மாதிரி ஒரு பெருமூச்செறிந்தாள். கவிந்திருந்த மூடுபனியில் அந்த மூச்சு ஓர் இயக்கம் உண்டாக்கிற்று.

''பீட்டரோட பையன் டெட் பாடியை போஸ்ட் மார்டத்துக்குக் கொண்டு வந்தப்ப நீ ஆஸ்பத்திரிக்கு வெளியிலே... நினைவிருக்கா?

''இருக்கே!''

''அப்ப என்னைப் பார்த்து நீ சொன்னது நினைவிருக்கா?''

''நாலு வருஷம் ஆச்சு இல்லே?''

சுலைமான் தலையாட்டினார்.

''மறந்துபோச்சு. என்ன சொன்னேன்?''

''தாங்கமாட்டான்னு நெனச்சேன். தாங்கிக்கிட்டான். நான் தாங்கிக்கிட்ட மாதிரின்னு சொன்னே!''

''அடிக்கடி அதை நான் நினைச்சுக்கறேன் ஜாஸ்மின்.''

அவள் கண்கள், அவர் கண்களை நேர்கொண்டன.

சாலை பழுதுபார்க்கும் ரோட்ரோலர் பெரிய ஓசையோடு அவர்களை நெருங்கி வந்தது. இருவரும் சாலையின் இரு ஓரங்களுக்குப் பிரிந்தனர். அவர்களைச் சற்று நேரம் விலக்கி வைத்த பெருமிதத்தோடு ரோடுரோலர் கடந்து சென்றதும் இருவரும் நின்ற இடத்துக்குத் திரும்பி வந்தனர்.

''இம்மானுவல் லாரி ஆக்ஸிடெண்ட் கேஸ்ல லாரி கம்பெனி ஓனரோட லாயர் நேத்து சர்ச்சுக்குப் போற வழியிலே என்னைப் பார்த்தாரு.''

சற்று வியப்போடு அவளை சுலைமான் பார்த்தார்.

''நீ டெய்லி சர்ச்சுக்குப் போறியா?''

கண்களை மூடி சின்ன தாய்த் தலை உலுக்கி அவள் பதில் சொன்னாள்

''ஜித்தாவிலே முடியாது இல்லே. அதான். அப்புறம் ஜென்லிக்கும் எலிசபெத்துக்கும் ஒரு பயிற்சி வேண்டாமா?''

''அவங்களைக் கூடக் கூட்டிக்கிட்டா போறே?''

''ஆமாம். எல்லாத்தையுமே நம்மாலே தாங்கிக்க முடியாது. ஏன் எதையுமே கூடத் தாங்கிக்க முடியாது.

எங்கே போனா தாங்கிக்கற சக்தி வரும்னும் அவங்களுக்குக் காட்டணும்லே! நான் என்ன கூடவேவா இருக்கேன்?''

அவர்களோடு கூட இல்லாத ஏக்கம் போர்வைக்குள் ஒளிந்திருந்து எட்டிப்பார்த்தது.

''அந்த லாயர் என்ன சொன்னாரு?''

''அந்த லாரி ஓனர் ரொம்ப நஷ்டப்பட்டுட்டானாம். கடன் கொடுத்திருந்த சேட் எல்லா லாரிகளையும் ஸீஸ் பண்ணிட்டாராம். தன்னால முடிந்ததைக் கொடுத்துறேன்னு ரிக்வெஸ்ட் பண்றானாம்.''

''திருட்டுப் பசங்க. வக்கீலை விட்டு இப்படி ஏதாவது டிராமா பண்ணுவானுங்க. நீ என்ன சொன்னே?''

நெற்றி நெறித்து அவரை விநோதமாகப் பார்த்தாள் ஜாஸ்மின்.

''ஆனாலும் நீ இப்படி அநியாயத்துக்குப் போலீஸ்காரனா ஆயிடக் கூடாது சுலைமான்.''

''என்ன பண்ணணுங்கறே?''

''மனுஷனாயிரு. ஓரளவாவது .''

அவர் மௌனமானார்.

பிறகு எதையோ ஒப்புக்கொள்வது போலச் சொன்னார்.

''முடியலே ஜாஸ்மின்.''

''முடியணும். முடியலாம்.. தொழுகைக்குப் போனா!''

அவர் பதில் சொல்லவில்லை.

## சிங்கமும் புலியும்!

எம்.ஜி.ஆரின் 'குடியிருந்த கோயில்', சிவாஜியின் 'திரிசூலம்', ரஜினியின் 'மூன்று முகம்', கமலின் 'சட்டம் என் கையில்' இந்த வரிசையில் இப்போ ஜீவாவின் 'சிங்கம் புலி'. காமெடி, ஃபைட்டுன்னு சிங்கமாகவும் புலியாகவும் டபுள் ரோலில் கலக்குறான் என் புள்ளைன்னு சௌத்ரி பெருமைபட்டுக்கிறாராம். ''கோலிவுட் காடே அதிருமில்லே'' என்கிறார் சாய் ரமணி.

*(வர வர... சினிமாவே சர்க்கஸ் கூடாரமா ஆகாம இருந்தா சரி...)*

**- விஜய் கோபால்**

"நான் கேட்டது?"

"மருமகனைக் கேட்டுச்சொல்றேன்னேன்."

"கேட்டியா?"

"ம்ம்.. அவரு நீங்க என்ன முடிவெடுத்தாலும் சரின்னுட்டாரு. தங்கமான பிள்ளை."

"அப்புறம்?"

"என்னோட ஹஸ்பண்ட் இம்மானுவலே போனப்பறம் அந்த உகருக்கு விலையா ஒரு பணம் வந்து என்னத்தை நிரப்பிடும் கலைமான்?"

லிட்டில் ஃப்ளவர் பஜனைக் குழு அடுத்த தெருவில் பாடும் பாட்டு ஹார்மோனிய ஓசையோடு இழைந்து வந்தது.

'இதோ உந்தன் மகன் பாராய் மாதா என்றாரே.

எல்லாம் உன் அடைக்கலம் யாவரும் அடைக்கலம்

அன்பே அடைக்கலம்... ஆதரி மாதாவே'

பாட்டுக்கு ஒரு நிமிஷம் காது கொடுத்துவிட்டு ஜாஸ்மின் சொன்னாள்.

"கலைமான். ஒரு ஹெல்ப்!"

"என்னது?"

"பீட்டரோட சைக்கிளைப் பாத்தியா? ரொம்ப வயசாயிடுச்சு அதுக்கு. அவனுக்கு நாம ஏன் ஒரு சைக்கிள் வாங்கித் தரக்கூடாது? அவனுக்கு என்ன மகனா இருக்கான் அவனுக்கு வாங்கித் தர?"

"நான் கேட்டனே. ஸ்டேஷன்லே எத்தனையோ திருட்டு சைக்கிள் பிடிபட்டு கேட்பாரில்லாமே வருஷக் கணக்கா வீணாக் கெடக்கு. ஒண்ணு தர்றேன்னேன். இதுக்கென்ன மாமு ஓடிட்டுருக்கில்லேன்னு மறுத்திட்டான். ரோஷக்காரன். வாங்கிக் கொடுத்தா ஏத்துக்க மாட்டான்."

"ம்ம்ம்ம்" அவள் பெருமிதமும் அடுத்து ஒரு யோசனையும் ஓடின.

"அப்போ அவனுக்கும் அவன் வீட்டுக்காரிக்கும் வேளாங்கண்ணிக்குப் போய்வர ரெண்டு டிக்கெட் வாங்கிக் கொடுக்கிறேன். கொடுத்துடறியா?"

"அவனுக்கு எங்கேம்மா நேரம் வேளாங்கண்ணிக்குப் போக? பொழுது விடியறதுக்கு முன்னே பால்பாக்கெட்டுங்களைத் தெருத்தெருவா விநியோகம் பண்ணணுமே!"

"நீ கொடு. டிக்கெட்டைப் பாத்தாவது யாரையாவது ஆள் ஏற்பாடு பண்ணி விடுவான்.பாவம்பா அவன்... எத்தனை மழை எத்தனை வெயில்...

**"தாங்கமாட்டான்னு நினைச்சேன். தாங்கிக்கிட்டான். நான் தாங்கிக்கிட்ட மாதிரியே..."**



எத்தனை ராத்திரி பகல்... இப்படியே எத்தனை வருஷம்? ஒரு மாற்றமாவது வேண்டாமா? எங்கிட்டே ஏக்கமாகச் சொல்லியிருக்கான் வேளாங்கண்ணி போவணும் போவணும்னு பார்க்கறேன் முடியலேன்னு!"

"சரி"

"ஷ்யூர்?"

"ஷ்யூர்"

கலைமானுக்கு ஒரு பேரக்குழந்தை பிறக்க வேண்டும் என்ற வேண்டுதலோடு அந்த டிக்கெட்டுகளை வாங்கப் போவது குறித்து அவரிடம் ஜாஸ்மின் சொல்லவில்லை.

ஏன் சொல்லவேண்டும்?

அமரர் கல்கி

# உண்மையான ஆஸ்திகம்!

கடவுள் ஒருவர் உண்டு என்பதை நான் நம்புகிறேன். ஆனால், கடவுள் இல்லை என்று வாதிப்பவர்களிடத்தில் எனக்குக் கோபம் கிடையாது.

கடவுள் உண்டு என்று சொல்லவும் பிரசாரம் செய்யவும் எனக்கு எப்படி உரிமை கோருகிறேனோ, அப்படியே கடவுள் இல்லையென்று வாதிக்கவும் பிரசாரம் செய்யவும் பிறருக்கு உரிமை கொடுக்க விரும்புகிறேன்.

இந்தியா தேசத்தில் எந்த நாளிலும் 'கடவுள் இல்லை' என்ற கட்சியும் பிரசாரமும் இருந்து வந்திருக்கின்றன. மேனாடுகளில் ஒரு காலத்தில் 'கடவுள் இல்லை' என்று சொன்னவர்களையும் வேறு விதத்தில் தேவ தூஷணை செய்தவர்களையும் நெருப்பிட்டுக் கொளுத்தி வந்தார்கள். வேறுவித சித்திரவதைகளும் செய்தார்கள்.


★ இங்கர்சால்

ஆனால், இந்தியாவில் அம்மாதிரி என்றைக்கும் கிடையாது. இராமாயண காலத்தில் இராமரிடமே ஒரு முனிவர் நாஸ்திக வாதம் செய்து அவரைத் திருப்பப் பார்த்தார். அவருடைய முயற்சி பலிக்கவில்லை. ஆனால் நாஸ்திக வாதம் செய்த ஜாபாலி முனிவரை யாரும் எதுவும் செய்துவிடவில்லை.



## கல்வெட்டுகள்

இங்கர்சால் என்னும் அமெரிக்க ஆசிரியர் 'கடவுள் இல்லை' என்று நிரூபிப்பதற்காக எவ்வளவோ சிரமப்பட்டுப் பல புத்தகங்களை எழுதினார். அப் புத்தகங்களைப் பலரும் படித்தார்கள்; ஆங்கிலம் படித்த இந்தியர்கள் உள்படத்தான். அதனால் உலகத்துக்கு ஒரு கெடுதலும் ஏற்பட்டுவிடவில்லை.

உண்மையான கடவுள் நம்பிக்கையானது நாஸ்திகப் பிரசாரங்களினால் அசைக்க முடியாததாயிருக்க வேண்டும்.

கடவுளுக்கு நாம் சப்பைக் கட்டுக் கட்ட வேண்டியதில்லை. 'கடவுள் இல்லை' என்பதற்குரிய வாதங்கள் எல்லாவற்றையும் கேட்ட பிறகும் நிலைத்திருக்கும் கடவுள் நம்பிக்கைதான் உண்மையான ஆஸ்திகம். அறிவுக்குத் திரை போட்டு மறைத்து, கடவுளை நம்பச் செய்வது உண்மை ஆஸ்திகம் அல்ல.

ஆகையால் இந்த நாளில் திராவிடக் கழகத்தாரும் மற்றவர்களும் செய்வதாகச் சொல்லப்படும் நாஸ்திகப் பிரசாரத்தைக் குறித்து நான் சிறிதும் கவலைப்படவில்லை.

**- கல்கி களஞ்சியம் நூலிலிருந்து...**

# குளக்கரையில் இசை மழை!

தினந்தோறும் தம்மை மெருகேற்றிக் கொள்ளும் பாரதத்தின் பாரம்பரிய கலைகளைப் பயிற்றுவிக்கும் குருகுலம் கலாக்ஷேத்ரா. இங்கு இன்னுமொரு இனிய மாற்றம். கலாக்ஷேத்ராவின் மையப் பகுதியில் மழை நீர் சேர்ந்து குட்டை என்ற பெயரில் அழைக்கப்பட்ட இடத்தைத் தூர் வாரி குளம் வெட்டி, குளக்கரையில் உட்கார படிகள் வைத்து, தாமரைக் கொடிகளை மிதக்கச் செய்து, குளத்துக்கு எதிரே கல்மண்டபம் கட்டியுள்ளனர். கலாக்ஷேத்ராவின் வளர்ச்சிக்கு ஆதாரமாக, ருக்மிணி தேவிக்குப் பக்கபலமாக விளங்கிய டாக்டர் பத்மாஸினியின் பெயரை நினைவுபடுத்தும் விதமாய் 'பத்ம புஷ்கரணி' என புது நாமம் சூட்டி கலைஞர்களுக்கான திறந்த வெளி அரங்கமாக அர்ப்பணித்து இருக்கிறார்கள். சமீபத்தில் அந்த பத்ம புஷ்கரணி மண்டபத்தில் டி.எம்.கிருஷ்ணா ஒவ்வொரு மொழிக்கும் ஒரு பாடல்பாடி ரசிகர்களைக் கட்டிப் போட்டார். இயல்பாக இயற்கைச் சூழலில், ஏற்றி வைத்த தீபங்களின் ஒளியில், இசையின் துல்லியத்தை ரசிக்க முடிந்தது. லீலா ஸாம்ஸனின் முயற்சியில் உருவான இந்த தீர்த்த கரையிலிருந்து மனத்தை இன்னும் மீட்க முடியவில்லை.



செய்திச் சித்திரம்:
ரமணன்

✸ உலகெங்கும் கிறிஸ்துமஸ் கோலாகலமாகக் கொண்டாடப் படும்போது ஏசுநாதர் பிறந்த பெத்லஹேம் நகரம் பின்தங்கிவிடுமா என்ன? கிறிஸ்துமஸ் தினத்துக்கு முந்தின நாள் மக்கள் தங்கள் வீட்டு வாசலிலும் மாடிகளிலுமாக ஆர்வத்துடன் குழுமுவார்கள். சாலைகளில் வரும் கம்பீரமான அரேபிய குதிரைகளுடன் ஊர்வலத்தைக் கண்டுகளிப்பதில் அப்படி ஓர் ஆர்வம்! இந்த ஊர்வலம் மாதா கோயில் போன்றே உருவாக்கப் பட்ட ஒரு செட்டுக்குள் நுழையும். ஏசுநாதர் பிறந்ததாக நம்பப்படும் இடத்தில் வெள்ளிச் சிலுவை ஒன்று வைக்கப்படும். கிறிஸ்துமஸ் அன்று ஒவ்வொரு வீட்டுக் கதவிலும் சிலுவைக் குறி வரையப் பட்டிருக்கும். ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் ஏசுநாதர் பிறந்த சூழலான மாட்டுத் தொழுவக் காட்சி வடிவமைக்கப்பட்டிருக்கும்.

✸ பிரேஸில் நாட்டில் உலகின் பல பகுதிகளில் குடியேறியவர்கள் உண்டு. எனவே பலவித கிறிஸ்தவ மரபுகள் அங்கே பின்பற்றப்படுகின்றன. என்றாலும் ஒவ்வொரு வீட்டிலும் அப்போது இடம் பெறும் பொருள் ஒன்று உண்டு. அது 'ப்ரெஸ்பியோ'. பெத்லஹேம் நகரில் ஏசுநாதர் முதன் முதலில் படுத்த புல்படுக்கையைத்தான் இப்படிக் குறிப்பிடுவார்கள். வட பிரேஸிலில் பல இடங்களில் ஏசுநாதரின் வாழ்க்கை நாட்டுப்புற நாடகங்களாக நடித்துக் காட்டப்படுகின்றன. இதில் ஆட்டு இடையர்களுக்குப் பதிலாக அந்த இனத்தைச் சேர்ந்த பெண்கள்தான் நடிப்பார்கள். இடைச்செருகலாகக் குழந்தை ஏசுவைக் கடத்திச் செல்ல முயற்சிக்கும் ஒரு நாடோடிக் கோமாளியும் இடம் பெறுவார்!

# மூன்று முறை குதி...

ஜி.எஸ்.எஸ்.





## தூர தேசங்களில் கிறிஸ்துமஸ்!



✸ செர்ரி மரத்திலிருந்து ஒரு கிளையை ஒடித்து, கிறிஸ்துமஸுக்குச் சில நாட்களுக்குமுன் தண்ணீருக்குள் போடுவார்கள். கிறிஸ்துமஸ் தினத்தன்று அது மலரத் தொடங்கினால் அந்தக் குடும்பத்துக்குப் பல நன்மைகள் உண்டாகும் என்ற நம்பிக்கை நிலவுகிறது. பல வீடுகளில் இப்படி மலர்ந்தால் குளிர் காலம் அந்த ஆண்டு குறைவாக இருக்கும் என்பது நம்பிக்கை. சீக்கிரமே குளிர் காலம் முடிவடைய வேண்டும், வசந்த காலம் தொடங்க வேண்டும் என்பதுதான் அந்த நாட்டு மக்களின் ஆசை. காரணம் பிரேஸிலில் குளிர் அவ்வளவு கடுமையானது.

✸ இராக்கில் உள்ள ஒவ்வொரு கிறிஸ்தவக் குடும்பத்திலும் கிறிஸ்துமஸுக்கு முதல் நாள் அனைவரும் ஒன்றாகக் கூடுவார்கள். வீட்டில் உள்ள ஒரு சிறுவனோ சிறுமியோ ஏசுநாதர்

# வேண்டியது கிடைக்கும்!



பிறப்பு குறித்த கதையைப் படிக்க, மற்றவர்கள் ஏற்றப்பட்ட மெழுகுவர்த்திகளைக் கையில் ஏந்தியபடி அந்தக் கதையைக் கேட்பார்கள். பிறகு வெளியிடங்களில் நெருப்பு மூட்டி அதைச் சுற்றி வருவார்கள். அப்போது பலவிதமான பாடல்களைப் பாடுவார்கள். அந்த நெருப்பில் பலவித முட்செடிகளைப் போடுவார்கள். நெருப்பு அணைந்தவுடன் ஒவ்வொருவரும் அந்த சாம்பலின் மீது மூன்று முறை குதிப்பார்கள். அப்போது அவர்கள் மனத்துக்குள் செய்து கொள்ளும் வேண்டுதல் பலிக்கும் என நம்புகிறார்கள்.

✸ கிறிஸ்துமஸ் தினத்தன்று மாதா கோயில் வளாகத்தில் பெருமளவில் ஒரு தீ மூட்டப்படும். கையில் குழந்தை ஏசுவின் உருவத்தைத் தாங்கியபடி பிஷப் அந்தத் தீயைச் சுற்றி வருவார். பிறகு கூட்டத்தில் உள்ள யாராவது ஒருவரைத் தொடுவார். அவர் தம் அருகில் உள்ள வேறொருவரைத் தொடுவார். இப்படியே அங்குள்ள ஒவ்வொருவரும் வேறொருவரைத் தொடுவார்கள். இது அமைதிக்கான தொடும்

முயற்சி என்று கருதப்படுகிறது.

✸ ஸ்பெயின் நாட்டில் கிறிஸ்துமஸ் என்பது ஒரு மிகத் தீவிர மத நாளாக அனுசரிக்கப்படுகிறது. டிசம்பர் 8 அன்றே கிறிஸ்துமஸ் விருந்துக்கான வெள்ளோட்டம் நடைபெறுகிறது. 'ஆறு பேரின் நடனம்' என்பது தேவாலயத்தில் நடைபெறும். வேடிக்கை என்னவென்றால், நடனமென்னவோ அதே பெயரில்தான் அழைக்கப்படுகிறது என்றாலும் இப்போதெல்லாம் பத்து பேர் அதில் பங்கேற்கின்றனர்!

✸ கிறிஸ்துமஸுக்கு முந்தைய தினத்தைக் குடும்ப உறுப்பினர்கள் ஒன்றாகச் சேர்ந்து கொண்டாடுவார்கள். பாதாமில் செய்த ஒரு வகை இனிப்பைப் பகிர்ந்து கொள்வார்கள். சிறு நகரங்களில் உள்ள சிறுவர் சிறுமியர் அன்று 'நகராட்சி விளையாட்டை' விளையாடுவார்கள். அதில் மேயராக நடிப்பதற்குப் போட்டா போட்டி. காரணம் மேயராக நடிப்பவர் எது சொன்னாலும் மற்றவர்கள் கேட்க வேண்டும் - 'தெருக்களைச் சுத்தம் செய்' என்பது உட்பட. மதிக்கவில்லை என்றால் அபராதம் உண்டு.

✸ முன்பு பாரசீகம் என்று அழைக்கப்பட்டது இன்றைய இரான். இங்குதான் பைபிளின் பிரபல ஏசுநாதர் காலத்தில் இருந்த, பிரபல 'மூன்று அறிஞர்கள்' வாழ்ந்தனர். டிசம்பர் தொடக்கத்தில் நோன்பு இருக்கும் கிறிஸ்தவர்கள், அந்த மாதத்தின் நாட்கள் கரைந்து கிறிஸ்துமஸ் தினத்தை அடையும் போது பெரும் விருந்து உட்கொள்வர். ஹரசா எனப்படும் கோழிக்கறி அடங்கிய உணவுப்பொருள் மிகப் பிரபலம்.

**வீட்டுக்குள் செர்ரி மரக்கிளை துளிர்க்க ஆரம்பித்தால் குடும்பத்தில் நன்மை உண்டாகும்.**

✸ நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த சிசிலி நாட்டுத் துறவி லூசியா என்பவர் ஸ்வீடனில் பெரிதும் மதிக்கப்படுகிறார். ஆட்சியின் அடக்குமுறைக்கு அஞ்சி, தலைமறைவாக இருந்த கிறிஸ்தவர்களுக்குப் பிறர் அறியாமல் விருந்துகளை எடுத்துச் சென்று படைத்தார் இந்தப் பெண் துறவி என்கிறது வரலாறு. மறைந்து செல்லும்போது வழி தெரிய, தம் தலையிலேயே சில மெழுவர்த்திகளை எரியவிட்டுக் கொள்வாராம். ஒரு நாள் அவர் கண்டுபிடிக்கப்பட்டு ஆட்சியாளரால் தூக்கிலிடப்பட்டார். அன்றிலிருந்து அவருக்கு மக்களால் தெய்வப் பதவி அளிக்கப்பட்டது. அவரது தினம் கிறிஸ்துமஸை ஒட்டி வரும். அன்று ஒவ்வொரு குடும்பத்தின் மூத்த மகளும் வெள்ளை உடையை அணிந்துகொண்டு, தலையில் சில மெழுகு வர்த்திகளைச் செருகிக்கொண்டு காட்சி அளிப்பாள். தமது குடும்ப உறுப்பினர்களுக்கு பன் மற்றும் காஃபி வழங்குவாள்.

சில சமயம் வேறுபாடுகளும் கூட சுவாரஸ்யமாகத்தான் இருக்கின்றன! களிப்பூட்டுகின்றன.



''காச்சல்னு உங்ககிட்ட வந்ததுக்கு, உங்க மனைவி பேர் என்ன? எங்கே வேலை பார்க்கிறீங்க? எவ்வளவு சம்பளம்... இப்படியெல்லாமா கேட்பாங்க டாக்டர்?''

''வேற பேஷண்ட் இல்லே. எனக்குப் பொழுதுபோக வேண்டாமா?''

- எஸ். முகம்மது யூசுப்



''தலைவரே! மணல் கடத்தல் லாரியை நம்ம கட்சிக்காரங்க பிடிச்சு போலீஸ்ல ஒப்படைச்சிருக்காங்க...''

''அதை ஏன் தயக்கமா சொல்றே?''

''அந்த லாரி உங்களது...!''

- கே.பிரசன்ன குமார்



''பரவாயில்லையே, உன் வீட்டுக்காரர் டி.வி.ல கூட பாடறாரே! எந்த டி.வி. இது?''

''நீ வேற, போன வாரம் நடந்த என் மச்சினன் பெண் கல்யாணத்துல அவர் கச்சேரி பண்ணப்ப எடுத்த விடியோ இது!''

- வெ.சீதாராமன்



''பேச்சு சுதந்திரத்தை நீங்க ஆதரிக்கிறீங்களா?''

''நிச்சயமா!''

''அப்படின்னா உங்க செல்ஃபோனை ஒரு நிமிஷம் குடுங்க. பேசிட்டுத் தந்திடறேன்!''

- ப. கோபி பச்சமுத்து

# காதல் வதந்தியைப் பேசும் மைனாக்கள்!



பொருளையும் புகழையும்
சேகரிக்கும் அவசரத்தில்
தொலைத்துவிட்ட
ஆதாம் ஏவாளின் நிர்வாணம்
இன்னும் அப்படியே இருக்கிறது.
நீயும் மறந்தாயோ
நான் கொண்ட காதலை
உன் தலை சுமந்த
என் மடியையும்
என் இதழ் பதித்த
உன் முகத்தையும்
காலம் கொலை செய்தும்
என் தோட்டத்து மைனாக்கள்
தினம் பேசியபடியேயிருக்கின்றன - நம்
காதலின் வதந்தியை...
காதலின் பரிமாணமென்று!

- இளங்கவி அருள்

## இயல்பு

என்னாயிற்று என்றேன்
எதுவுமில்லை என்றாய்,
பின் எதையும்
கேட்கவில்லை நான்.
இயல்பின்றி போவதில்
சம்மதமில்லை எனக்கும்.

- செல்வராஜ் ஜெகதீசன்

விளையாட்டு மைதானத்தில்
தொலைத்த தன் ஒரு ரூபாயைத்
தேடிச் சலித்த குழந்தை
விசும்பலோடு நகர்ந்ததை
எதிர்கொண்ட அம் மைதானம்
ஒரு பணம் காய்க்கும் மரத்தையும்
விரும்பியபோது
காசுகளைத் தரும்
ஜாமின்ரி பாக்ஸ் ஒன்றையும்
குழந்தையின் கனவுக்கு அனுப்பி வைத்தது.
படுக்கையெங்கும்
காசுகள் நிறைய நிறைய
தூக்கத்தில்
சிரித்துக் கொண்டேயிருந்தது குழந்தை!

- க. அம்சப்ரியா



வாசகர்களே!
உங்க க்யூட் கவிதைகளைச் சீக்கிரமா
'கவிதை கஃபே'ன்னு குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.




## வாழ்வின் இன்னொரு திறவுகோலாய்...

ஒரு திரிக்கும்
நெருப்புக்கும்
இடையில்

உட்காராமல்
பறந்துவிட்ட
ஒரு வண்ணத்துப்பூச்சிக்கும்
பூவிற்கும் இடையில்

சோறூட்டும் கைக்கும்
வாய் திறந்த குழந்தைக்கும்
இடையில்

தயாராக வைத்த
எழுதுகோலுக்கும்
காகிதத்துக்கும்
இடையில்

நெருங்கிப் பிரிந்த
இரு இதழ்களுக்கு
இடையில்

தட்ட முனைந்த
இரு கைகளுக்கு
இடையில்

காத்துக் கொண்டிருந்தவருக்கும்
வரத் தவறியவருக்கும்
இடையில்

நிகழாத
சந்திப்புகளுக்கு
காரணமாய்

நிகழ்ந்துவிடுகிறது
ஒரு சுவாரஸ்யமான நிகழ்வு.

- க.ஆனந்த்

## தெரிந்தது

பூமியின் உயரங்களை
பள்ளங்களாக்கியபோது
தெரியவில்லை;
வெள்ளம் வரும் என்று

- வேதாத்மா

# கமல்... ஜீன்ஸ்... பொங்கல்..!

**களவாணியில் இயக்குனர் சற்குணம் கண்டெடுத்த ஓவியம். நம்ம பக்கத்து வீட்டுப் பொண்ணு போல தோற்றத்தில் ரசிகர் மனசுல பசக்னு ஒட்டிக் கொள்கிற நடிகை ஓவியா.. திருச்சூர் விமலா கல்லூரியின் இங்கிலீஷ் லிட்ரேச்சர் மாணவியும்கூட. அவரிடம் ஒரு ஜாலி பேட்டி:**

**கேரளா to தமிழ்நாடு ஏன்?**

''கேரளாவில் சினிமா என்பது மற்ற தொழில்களைப் போல அது ஒரு தொழில் அவ்வளவுதான். அதனால யாரும் என்னை பிரமிப்பா பார்க்கல. என் காலேஜ் ஃப்ரெண்ட்ஸ் எப்போதும் போலதான் இப்பவும் பழகுறாங்க. திறமைக்கு ஏத்த சரியான இடம் தமிழ்நாடு. அதனாலதான் நாங்க இங்க வர்றோம்.''

**பெரிய நடிகைகள் பொறாமைப்படும் அளவுக்கு வாய்ப்புகள் குவியுதாமே. என்ன ரகசியம்?**

''உண்மைதான். காரணம் தெரியல. உங்க ஊரு பொண்ணு மாதிரியான தோற்றம். கொஞ்சம் திறமை, கொஞ்சம் லக். இந்த காம்பினேஷன் சரியா இருக்கு போல.''

**நடிக்கக் கத்துக் கொடுத்தது யார்?**

''சின்ன வயதிலிருந்து நான் பார்த்த, இங்கிலீஷ் படங்கள்தான்.''

**தமிழ் ரசிகர்களுக்கு ஜோதிகா, குஷ்பு, சினேகா மாதிரி கொஞ்சம் குண்டா இருந்தாதானே பிடிக்கும். அநியாயத்துக்கு ஒல்லியா இருக்கீங்க?**

''அதெல்லாம் பழைய டிரெண்ட். இப்போ மாறி ஸ்லிம்மர்தான் ஃபேஷன் ஆயிடுச்சு. தேவைப்பட்டா என்னால குண்டா ஆக முடியும்.''

**எது எது பிடிக்கும்?**

''சென்னையில்... பொங்கல் வடை....



பரமக்குடி கமல்... அமெரிக்க ஸ்டைல் ஜீன்ஸ், டீசர்ட்...

**அரசியல் ஆசை உண்டா?**

''எனக்கு இப்போது வயது 18 ஆயிடுச்சு. முதன் முறையா வோட்டு போடப் போறேன். இப்போ இல்லை. எதிர்காலத்தில் அரசியலுக்கு வந்தாலும் வரு வேன். நான் 'மன்மத அம்பு'வில் நடிச்சாலும் கமலுக்கு ஜோடியில்லை. இப்போதைய ஆசை கமலுக்கு ஜோடியா நடிக்கணும் அவ்வளவுதான். அது போதும்.''

**மனத்தைக் களவாண்ட பயபுள்ள யாராவது இருக்காங்களா?**

''லவ் இஸ் ஸ்வீட் எக்ஸ்பீரியன்ஸ். எனக்கு அது இன்னும் அமையல. என் மனசைக் களவாடும் களவாணிக்குக் காத்திருக்கேன்.''

**எந்த டிஷ் நல்லா சமைப்பீங்க?**

''திங்க மட்டும்தான் தெரியும். எதுக்கு சமைக்கணும்? வர்றவரு சமைக்க மாட்டாரா என்ன?''

**உங்களுக்கும் மைனாவுக்கும் (அமலாபால்) பயங்கர சண்டையாமே?**

''யாருக்குத் தெரியும். பத்திரிகையில் அப்படிதான் எழுதுறாங்க. நல்லா நடிக்கக்கூடிய (அ) முன்னணி நடிகைகள் எல்லோரும் எனக்குப் போட்டிதான். போட்டியைச் சண்டைன்னு தப்பா சொன்னா எப்படி?''

**- ராகவ் குமார்**

# ஆஹா ஆல்பம்



மூன்று வருடங்களுக்கு முன்பு, நான் என் கணவர், குழந்தை மற்றும் நாத்தனாரோடு 'ஏற்காடு' சென்றிருந்தேன்; அங்கு, நான் சிறிதும் நினைத்துப் பார்த்திராத வகையில், பிரபல பின்னணிப் பாடகியான எஸ். ஜானகி அம்மாளை அங்கு கண்டேன்; உங்களோடு சேர்ந்து ஒரு ஃபோட்டோ எடுத்துக்கலாமான்னு கேட்டவுடனேயே, 'தாராளமாய்' என எந்தவொரு பந்தாவுமே இல்லாமல் 'ஓகே' சொன்னார். அப்போது, என் கணவரின் கேமராவில் காலம் பதித்த அற்புத ஃபோட்டோதான் இது.

**- யமுனா ரெங்கநாதன், திருச்சி**

1988ஆம் வருடம் செப்டம்பர் மாதம் ஒரு ஃபோட்டோகிராபர் நண்பர் மூலம், நடிகை ஸ்ரீப்ரியாவைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. அன்றைய காலக்கட்டத்தில் 'சாட்டையைத் தேடும் பம்பரம்' என்ற மேடை நாடகத்தில் மூன்று கேரக்டரில் நடித்துக்கொண்டிருந்தார் ஸ்ரீப்ரியா. அதில் ஒரு கேரக்டரில் 'கோவை மொழி' பேசி நடித்து இருந்தார். எனக்கு அது மிகவும் பிடித்து இருந்தது. நேரில் பார்த்துப் பேச வேண்டும் என்ற எண்ணத்தில், அவரை அன்று சந்திக்கும் வாய்ப்பு கிடைத்த போது, அவரைப் பார்த்து என் எண்ணத்தில் இருந்தவைகளைக் கொட்டி, என்ன பேச வேண்டும்? எப்படிப் பேச வேண்டும்? என்று தெரியாமல் பிரமித்துப் போய், ஏதோ உளறிக் கொண்டு இருந்தேன். அதை இப்போது நினைத்துப் பார்க்கும்போதும் சிரிப்பு வருகிறது. திரையில் என்னை ஈர்த்த, நேரில் பார்த்த அவரின் கன்னத்தின் குழிதான் என்னை இப்படி உளற வைத்தது போலும். இது அப்போது எடுத்த படம்.

**- ஜெ.பாலசுப்ரமணியன், சென்னை-91**



நான் இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, கும்பகோணம் கிளையில் மேலாளராகப் பணியாற்றிய நேரம். அப்போது வங்கிகள் மூலமாக பசுமைப்புரட்சி, வெண்மைப் புரட்சி என வேளாண் அபிவிருத்திகள் பெருகிய காலம். இத்திட்டத்தின் கீழ் பெருமளவில் கடன் வழங்கிய வங்கிகளையும் கிளை மேலாளர்களையும் பாராட்டும் முகமாக அப்போதைய தமிழ்நாட்டு முதல்வராயிருந்த எம்.ஜி.ஆர்., மாவட்டம் முழுவதும் கூட்டங்கள் ஏற்பாடு செய்து மானியத் தொகைக்கான காசோலையை (SUBSIDY CHEQUE) அவர் கையால் வழங்கினார்கள். இந்தப் புகைப்படம் பாபநாசத்தில் நான் காசோலை பெற்றுக் கொண்டபோது எடுத்தது. என்னுடைய உழைப்புக்குக் கிடைத்த பாராட்டுப் பத்திரமான 30 ஆண்டுகளைக் கடந்த இந்தப் புகைப் படத்தைக் கவனமாகப் பாதுகாத்து வருகிறேன்.

**- பி.ஆர்.முத்து, சென்னை-93**



ஃபோட்டோவுடன் இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் பரிசு ரூ.50/-

**வாசகர்களே! நீங்கள் பெரிதும் ரசித்து, பொக்கிஷமாகப் பாதுகாக்கும் ஃபோட்டோ எதுவாயினும் 10 வரிகள் குறிப்புடன் 'ஜம்'முன்னு எழுதி அனுப்புங்க...**

முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் செப்டம்பர் 18, 1980ல் அன்றைய ஜனாதிபதி நீலம் சஞ்சீவரெட்டி அவர்களால், முதியோர் இல்லங்களின் முன்னோடியாக விளங்கும் 'விஷ்ராந்தி'யின் புதுக் கட்டடம் சென்னை பாலவாக்கத்தில் திறந்து வைக்கப்பட்டது. ஜனாதிபதி ஏற்றி வைக்கும் குத்துவிளக்குத் திரியைத் தூண்டிவிடும் பாக்கியத்தை நான் பெற்றேன். 'விஷ்ராந்தி'யின் வளர்ச்சியில் பங்குபெற்ற பல பெண் மணிகளில் நானும் ஒருத்தி என்பதை நினைவுகூரும் இந்தப் புகைப் படத்தை ஒரு பொக்கிஷமாகக் கருது கிறேன்.



இந்தப் புகைப்படத்தில் இருக்கும் மற்றவர்கள், இடமிருந்து வலமாக, திருமதி சாந்தா ஷெட்டி, திருமதி சரோஜா சேது, திருமதி கௌசல்யா சேஷாத்ரி ஆகிய அனைவரும் இந்த முதியோர் இல்லத்தின் வளர்ச்சியில் பெரும்பங்கு உடையவர்கள்.

**- உமா தேவராஜன்,**
**'விஷ்ராந்தி',**
**சென்னை-18**

# நடக்குமென்பார்; நடக்கும்!



## மேஷம்

எடுத்த காரியம் வெற்றி பெறும். பொன், பொருள் சேரும். பத்திரிகைகளில் பெயர் வரும். கடல் கடந்த மனிதர்களால் நற்பலன் தேடி வரும். புண்ணியஸ்தலம் சென்று வருவீர்கள். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். உற்றார், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். தொலைதூரத்தில் இருந்து நல்ல செய்தி வரும். குருவை வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.



## ரிஷபம்

குழந்தைகள் பற்றின மனக் கவலை தீரும். உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்படும். தடைபட்டு வந்த சுபகாரியம் தடை விலகி நல்லபடியாக நடக்கும். விலகிப் போன கூட்டாளிகள் விரும்பி வருவார்கள். பிரிந்து போன குடும்பம் ஒன்றுபடும். கொடுக்கல் வாங்கலில் இருந்து வந்த சிக்கல் விலகி, வராத பணமும் வந்து சேரும். ராகு, கேதுவை வழிபட்டு வர தீமைகள் விலகி நற்பலன் அதிகரிக்கும்.



## மிதுனம்

உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். வீடு மாற்றம் உண்டாகும். படிப்பில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வியாபாரத்தை வேறு இடத்துக்கு மாற்றி அமைக்க நேரிடும். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். மனசஞ்சலம் விலகி மன அமைதி கிட்டும். சுப காரியச் செலவு அதிகரிக்கும். சிலருக்கு நிலம் வாங்கும் யோகம் கிட்டும். கடன் தொல்லை தீரும். சத்ரு பயம் விலகும். ராகு, கேது, குரு, சனியை வழிபாடு செய்துவர சங்கடங்கள் விலகும்.



## கடகம்

குரு மாற்றம் நல்ல முன்னேற்றத்தை உண்டாக்கும். நிதி நிலைமை சரியாகும். கடன் பிரச்னையிலிருந்து விடுதலை கிட்டும். மனசஞ்சலம் விலகும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். இல்லற வாழ்வில் நல்ல புரிதல் ஏற்படும். வெளிநாடு போகும் யோகம் கிட்டும். செலவுகள் பயன் உள்ளதாக இருக்கும். உல்லாச பிரயாணம் தேடி வரும். ஆடை, ஆபரணப் பொருட்கள் சேரும். நீண்ட கால கடன் பிரச்னை தீரும். வழக்கு, வியாபாரம் வெற்றி பெறும்.



## சிம்மம்

எதிரிகளால் தொல்லை ஏற்படும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்துவது நல்லது. மனத்தில் சந்தோஷம் மிகுந்து காணும். பணப் பிரச்னை இருக்காது. இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். கூட்டுக் குடும்பத்திலிருந்து தனிக் குடித்தனம் போகும் சூழ்நிலை உருவாகும். மனக் குழப்பம் நீங்கும். ராகு/கேது/குருவை வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



## கன்னி

நல்ல வசந்த காலம் ஆரம்பம். மறைமுக விரோதிகளால் இருந்து வந்த தொல்லை தீரும். கடன் பிரச்னை தீரும். வீட்டில் சுபச் செலவு ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வம்பு வழக்கு வெற்றி அளிக்கும். எதிர்பார்த்த இடத்தில் பண உதவி கிட்டும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகம் பதவி உயர்வு கிட்டும். ராகு/கேதுவை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

**19.12.2010 முதல் 25.12.2010 வரை** **தஞ்சை பரத்வாஜ்**



## துலாம்

எதிலும் போட்டா போட்டியான காலம் இது. தேவை இல்லாத பிரச்னைகளில் தலையிடா மல் இருப்பது நல்லது. வம்பு வழக்கு வந்து சேரும். மறைமுக எதிர்ப்புகள் அதிகரிக்கும். கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. தொழில் ஸ்தானத்தில் எதிரிகள் தொந்தரவு அதிகரிக்கும். குடும்ப உறவில் அனுசரித்துப் போவது நல்லது. எதிர்பாராத வைத்திய செலவு ஏற்படும். சனி/குருவை வழிபட்டுவர சங்கடம் தீரும்.



## மகரம்

ஆடை, ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். வாக னம் வாங்கும் யோகம் கிட்டும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வரும். உடல்நிலை நன்றாக இருக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். நிலம் வாங்கும் யோகம் வந்து சேரும். உத்தியோகத் தில் இடமாற்றம் உண்டாகும். சில ருக்குப் புதிய பணி தேடி வரும். வழக்கு வெற்றி அளிக்கும். பணக் கஷ்டம் இருக் காது.



## விருச்சிகம்

நீண்ட காலத்துக் குப் பிறகு வெளிச்சத்துக்கு வந்து உள்ளீர்கள். மனத்தில் நினைத்தது நடக் கும். இல்லற உறவில் இருந்து வந்த தொல் லைகள் விலகும். கணவன்/மனைவி சம ரசப் போக்கு ஏற்படும். குழந்தைகள் வழி யில் சுபச் செலவு ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு ஏற்படும். சிலருக்குப் புதிய பதவி தேடி வரும். ராகு/கேதுவை வழிபட்டு வர சங்கடம் தீரும்.



## கும்பம்

தடைகள் விலகி திருமணம் கைகூடும். நிதி நிலை மையில் நல்ல முன்னேற்றம் ஏற் படும். உற்றார், உறவினர்களால் நற்பலன் கிட்டும். குழந்தையைப் பற்றின மனக் கவலை தீரும். கடன் பிரச்னை தீரும். பொன், பொருட்கள் வாங்குவீர்கள். உற் றார், உறவினர் வருகை மனத்துக்கு சந் தோஷத்தை ஏற்படுத்தும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். கொடுக்கல் வாங் கலில் சிக்கல் தீரும். வழக்கு முடிவுக்கு வரும்.



## தனுசு

வீடு மாற்றம், தொழில் மாற்றம் ஏற்படும். உடல் நிலை குணமாகும். கல்வி வளம் மேலோங்கும். மனத்தில் இருந்து வந்த மனபாரம் விலகும். கடன் சுமை தீரும். வியாபாரத்தில் கணிசமான வருவாய் கிட் டும். சுப காரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். தொலைதூரத்திலிருந்து நல்ல தகவல் வரும். தடைகள் விலகி திரு மணம் கைகூடும். செலவுகள் கட்டுக் கடங்கி இருக்கும். ராகு/கேது/சனியை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.



## மீனம்

மன சஞ்சலம் தீரும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற் படும். உற்றார் உறவினர்கள் பிரச் னைகள் ஏற்படும். வீடு மாற்றம் உண்டா கும். தடைகள் விலகி திருமணம் கைகூடும். வியாபாரம் நல்ல பலன் கிட்டும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். ஆரோக் கியம் சீராகும். கடன் பிரச்னையிலிருந்து விடுதலை கிட்டும். மனக்குழப்பம் தீரும். வர வேண்டிய நிலுவைகள் வந்து சேரும். ராகு/கேது/சனி பகவானை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

காதல் + கலாட்டா + கலக்கல் தொடர்கதை

ஆளில்லா சிக்னலில்
நின்று புறப்படும்
தேசப்பற்றுள்ள குடிமகன்
போல் உன் தெருவில் நான்...
யாராவது கேட்டால்
உனக்கும் எனக்குமிடையில்
'ஒன்றுமில்லை'
என்று சொல்

- சரவணமுத்து

சென்னையின் அதிநவீன திரையரங்கின் வாசலில் அதிசயமாக ப்ளாக்கில் டிக்கெட் விற்பனை யாகிக் கொண்டிருந்தது. அனைத்துக் கல்லூரிக் கலைவிழாதான் நடக்கிறதோ என்று எண்ணும்படி இளைஞர்களும் இளைஞிகளும் குழுக்களாக நின்று கொண்டிருந்தார்கள். தனியாக வந்த பையன் கள் ரொம்ப சிரமப்பட்டுக் கொண்டிருந்தார்கள். சாயம் வெளுத்தும், ஒட்டுகளோடு காஸ்ட்லி பிராண்ட் லேபின் ஒட்டப்பட்ட ஜீன்ஸ் அணிந் திருந்த பெண்களைக் கவர்வதற்கான சாகச ஆலோ சனைகளில் தலை கலைத்துக் கொண்டிருந்தார்கள்.

''டிக்கெட் கிடைக்காது போலி ருக்கே! திரும்பிப் போயிட லாமா?'' என்றான் ஆனந்த்.

பிரிட்டிஷ் கவுன்சில் நூலகத் தில் புத்தகங்களைத் திருப்ப வேண் டும் என்ற திட்டத்தில் இருந்த வனை சினிமாவுக்கு இழுத்துவந்து விட்ட உதயகுமார் மீது உள்ளூர எரிச்சலில் இருந்தான்.

உதயகுமார் காலையிலேயே எட்வினை அழைத்துப் பேசினான்.

''எட்வின், ஆனந்த் எழுதுன கவிதையை நீ வாசிச்சதினால, நான் ஆத்திரப்பட்டு ஆனந்தை அடிச்சுட்டேன்.''

எட்வின் மௌனமாகத் தலை யாட்டினான்.

''இதுல உனக்கெதுவும் வருத்த மில்லையே!''

எட்வினுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

''அண்ணே! நேத்து அவன் எனக்கு எழுதிக் கொடுத்தது

14

காதல் கேம்பஸ்

ஓவியம்: தமிழ்

# வே.எழிலரசு



சும்மா ஜிகினா கவிதைதான். அதுக்கே நம்ம ஆடியன்ஸ்ஸெல்லாம் ஆடிப்போயிட்டாங்க. அவன், அவனே வாசிக்கிறதுக்காக எழுதுன கவிதையைப் படிச்சிருந்தா தூள் கிளப்பிட்டிருப்பான்.''

''சரி அவ்வளவு பிரமாதமா எழுதுன கவிதையை ஏன் அவன் வாசிக்கலை?''

''அண்ணே. இவ்வளவு நாள் பழகறீங்க. ஒரே ஊர்ல இருந்து வந்திருக்கீங்க. ஆனந்துக்கு காட்பிரதர்னு வேற சொல்லிக்கறீங்க. இன்னுமா நீங்க ஆனந்தைப் புரிஞ்சுக்கல?''

உதயகுமார் குழப்பமாக எட்வினைப் பார்த்தான்.

''அண்ணே நம்ம ஆனந்துக்கு ஒரு சைக்காலஜிகல் பிராப்ளம் இருக்குதண்ணே.''

ஆழ்ந்த உறக்கத்திலிருக்கும்போது யாரோ சட்டென்று அறைந்து எழுப்பியதுபோல் உணர்ந்தான் உதயகுமார். உளவியல் பிரச்னை ஆனந்துக்கா... என்னவாக இருக்கும்? சிறுவயதில் அப்பாவை இழந்தது. விவரம் தெரிந்த வயதில் அப்பா இறந்ததற்கான உண்மை காரணம் அறிய நேர்ந்தது. இவைகளால் ஏற்பட்ட உளச் சிக்கலா? ஊகங்களினால் அறிந்துவிட முடியாது என்பதனால் எட்வினிடமே என்ன பிரச்னை என்று கேட்டான்.

''அண்ணே. நம்ம ஆனந்துக்குப் பொண்ணுங்கனாலே அலர்ஜி. அதுவும் அழகான பெண்கள்ன்னா அவ்வளவுதான்... அவங்க திசையில திரும்பிப் பாக்கக்கூட பயப்படறான். நேத்து

கவியரங்கத்துல ஃபாஷன் பரேட் மாதிரி நம்ம பொண்ணுங்க வந்தாங்கல்ல... பையன் அம்பேல் ஆயிட்டான்.''

''........''

''எந்த அழகான பொண்ணைப் பார்த்தாலும் ஏதோ மனித வெடிகுண்டைப் பார்த்தமாதிரி பயப்படறான்.''

உதயகுமார் தீவிரமாக யோசித்தான். பின் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போல, ''எட்வின் இன்னிலிருந்து உனக்கு ஒரு அசைன்மெண்ட்.''

''என்ன அண்ணே?''

''ஆனந்த் பெண்கள்கிட்ட சகஜமா பழகறதுக்கு என்னவெல்லாம் பண்ணணுமோ, அதையெல்லாம் நீ பண்ற.''



''ஒருவர் எப்படிப் பிறந்தார், ஒருவர் எப்படி இறந்தார் என்பது முக்கியமில்லை. அவர் எப்படி வாழ்ந்தார். எதற்காக வாழ்ந்தார் என்பதுதான் முக்கியம். இயேசுவின் வாழ்க்கையே மெய்யுணர்வுத் தன்மையை ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் கொண்டு வருவதாகத்தான் இருந்தது.''

- சத்குரு

''ஓ. இவ்ளோதானா மேட்டரு. அதுக்கென்ன பண்ணிட்டாப் போச்சு. குல்பி ஐஸ் சாப்பிடறதுக்கும் குவாட்டர் அடிக்கிறதுக்கும் டாக்டர் பிரிஸ்கிரிப்ஷன் குடுத்தமாதிரி இருக்கு...''

''டாய்...''

''சாரிண்ணே... அப்ப நான் வரட்டா?''

''சரி. அப்புறம்... இன்னிக்கு நாம சினிமாவுக்குப் போறோம். நீ, ஆனந்த், கதிர் மூணுபேரும் பத்து மணிக்கெல்லாம் ரெடியாயிட்டு என் ரூமுக்கு வாங்க. என் ரூம்மேட் இம்மானுவலும் வர்றாப்பல. நாம அஞ்சுபேரும் போறோம்.''

''ஓ. சூப்பர்''



எட்வின் முகத்தில் 'சந்தோஷம்' கட்-அவுட் வைத்துக்கொண்டிருந்தது.

''நான் ஷோ பாத்துட்டு அப்படியே மத்தியானம் அஞ்சப்பர்ல சாப்பிடறோம்.''

''அஞ்சப்பர்-லயா?''

''ஆமாம்...''

''அண்ணே ஒண்ணு பண்ணுங்களேன்''

எட்வின் ஏதோ யோசனை சொல்லப்போகிறான் என்று முனைப்போடு கேட்கத் தயாரான உதயகுமாரிடம் எட்வின் சொன்னான்.

''அண்ணே! இந்த ஆனந்த் பயலை வாரம் ஒருமுறை... ஓங்கி ஒரு அறை கொடுங்களேன்.''

உதயகுமார் விளையாட்டாகக் கையை ஓங்க எட்வின் ஓடினான்.

'ப்ளாக்கில் டிக்கெட் வாங்கி காசைக் கரியாக்க வேண்டாம்' என்று சொன்ன ஆனந்தின் கண் முன்னே டிக்கெட்டுகளை ஆட்டினான் உதயகுமார்.

''புக் பண்ணியாச்சு கவலைப் படாதே.''

நேரத்தைக் கொல்ல ஸ்டில்களைப் பார்த்தார்கள். ஏறக்குறைய முத்தமிட்டுக்கொண்டிருந்த காதல் ஜோடிகளைப் பார்த்தார்கள்.

பி.சி. சர்க்காரின் தொப்பி போல் நீண்டிருந்த காகிதக் கூடையில் பாப்கார்ன் வாங்கிக் கொறித்தார்கள். டிக்கெட் கிடைக்காத டென்ஷனில் 'தியேட்டருக்கு பாம் வைக்கலாமா' என்று சிந்தித்துக் கொண்டிருந்தவர்களைக் கிண்டலடித்தார்கள்.

அப்பொழுது எட்வின் சொன்னான்: ''அண்ணே அந்த டீமைப் பாருங்க.''

உதயகுமாரும் இம்மானுவ

லும் பார்த்தார்கள். ஆனந்தும், கதிரும் ஏதோ ஒப்புக்குப் பார்ப்பது போல பார்த்தார்கள்.

"அங்க... அண்ணே... லெஃப்ட் சைடுல... ஒயிட் கலர்ல ஸ்லிவ் லெஸ் சர்ட்டும் டார்க் ப்ளு ஜீன் ஸும் போட்டுக்கிட்டு இருக்காளுங்க... அவுங்க.'' எட்வின் குறிப்பிட்ட பெண்களை நால்வரும் பார்த்தார்கள்.

''அந்த டீம் நம்ம டீமுக்கு நல்லா மேட்ச் ஆவுது இல்ல?''

''என்ன மேட்சிங்?'' என்று புரியாமல் கேட்ட ஆனந்திடம், ''நாமளும் பொண்ணுங்க இல்லாம தனியா வந்திருக்கோம். அவங்களும் பையன்க இல்லாம தனியா வந்திருக்காங்க. நாமளும் அஞ்சு பேரு. அவுங்களும் அஞ்சு பேரு. ஆனந்த் இப்ப உனக்கு ஒரு சேலஞ்ச்.''

''என்ன சேலஞ்ச்?''

''அந்தப் பொண்ணுங்க கிட்ட இப்ப நீ போய் பேசற.''

ஆனந்த் அந்தப் பெண்களைப் பார்த்தான். ஐந்து பெண்களும் சொல்லி வைத்தாற்போல் உடலில் ஒரு பொட்டு நகை கூட இல்லாமல், ஆனால் ஜ்வலித்துக் கொண்டிருந்தார்கள்.

கைகளில் 'ஃப்ரண்ட்ஷிப் பேண்ட்' அணிந்திருந்தார்கள். அதிலும் அந்தக் குழுவில் மையத்தில் அகண்ட விழிகளோடு உயரமாய் நின்றிருந்தவள் பேசுவதும் சிரிப்பதும் அசைவதும், ஆனந்தைக் கண் இமைக்காமல் பார்க்க வைத்தது.

ஆனந்த் முணுமுணுத்தான். ''கடவுளே! இந்தப் பொண்ணுங்களுக்கு டிக்கெட் கிடைக்கக்கூடாது?''

''ஏண்டா'' என்றான் எட்வின்.

''இந்தப் பொண்ணுங்க தியேட்டர் உள்ளே வந்துட்டா, எப்படி சினிமாவை ஸ்கிரீன் பண்ண முடியும்?''

''ஏன்?''

''சினிமாவை இருட்டிலதான்... ஸ்கிரீன் பண்ணனும். இந்தப் பொண்ணுங்க தௌசண்ட் வாட்ஸ் பல்பு மாதிரி எரியறாளுங்கள.''

''அட... அட... அப்படிப் போட்றா...''

எல்லோரும் சிரித்தார்கள். இவர்களின் டெசிபல் கூடிய சிரிப்பொலியில் அந்தப் பெண்கள் திரும்பிப் பார்த்தார்கள். அதிலும் குறிப்பாக அந்த அகண்ட நயன அழகி ஏனோ தம்மைப் பார்த்தது போல் உணர்ந்தான் ஆனந்த்.

எட்வின் உதட்டை இறுக மூடியபடி பேசினான்.

''ஆனந்த் போய் பேசுடா.''

''முன்னப் பின்ன தெரியாதவங்ககிட்ட பேசுறது அநாகரிகம்.''

''ஏய் உன்னை என்ன ப்ரபோஸ் பண்ணவா சொன்னோம். சும்மா பேசத்தானே சொல்றோம்.''

ஆனந்துக்கு அந்தப் பெண்களிடம் சென்று பேச வேண்டும் என்ற உந்துதல் உள்ளுக்குள் ஊற்றெடுத்தது. ஆனால் அந்தப் பெண்களின் எதிர்வினை எப்படி இருக்குமோ என்ற அச்சம், அவன் ஆழ்மன ஆசைக்குத் தடை போட்டது. தீவிரமாக யோசித்




''ராஜாவுக்கு யானை மேலே ஏறி சவாரி செய்யணும்னு ஒரு ஆசை இருந்தது!''

''ஏன்...! அது நியாயமான ஆசைதானே!''

''நியாயமான ஆசைதான். ஆனா யானைக்கும் ராஜா மேலே ஏறி சவாரி பண்ணணும்னு ஒரு ஆசை இருந்திருக்கும்னு யாரும் நினைக்கலே!''

- சீத்தாதம்பி

தான். அப்பொழுது எட்வின், உதயகுமார் காதில் கிசுகிசுத்தான்.

"அண்ணே... அசைன்மெண்ட் ஆரம்பமாயிடிச்சு."

உதயகுமார் புரிந்தது என தலையாட்டினான். "அந்த டிக்கெட்டுகளைக் கொடுங்க." உதயகுமார் டிக்கெட்டுகளைக் கொடுக்க, அதை வாங்கி, அந்த டிக்கெட்டுகளின் பின்புறத்தில் எட்வின் எதையோ கிறுக்கினான். டிக்கெட்டுகளை ஆனந்தின் சட்டைப் பாக்கெட்டில் வைத்தான்.

"இப்போ போய்ப் பேசு."

"என்ன பேசறது?"

எட்வின் வகுப்பெடுக்கும் பேராசிரியரின் தோரணையோடு தோள்களைக் குலுக்கினான்.

"போனதும்... செல்ஃப் இண்ட்ரோ பண்ணிக்கோ... நம்ம காலேஜ் பேரைச் சொல்லு. அவுங்க எந்த காலேஜ்-னு கேளு."

ஆனந்த் எல்லாவற்றுக்கும் தலையாட்டினான். "எக்ஸ்ட்ரா டிக்கெட் இருக்கான்னு கேளு... அவுங்க, இல்லை எங்களுக்கு டிக்கெட் கிடைக்கலைன்னு சொன்னா... உடனே உன் பாக்கெட்ல இருக்குற அஞ்சு டிக்கெட்டையும் எடுத்துக் கொடுத்துடு."

"அப்ப நமக்கு சினிமா?"

"யாருடா இவன்?" எட்வின் சலித்துக் கொண்டான். "நமக்குச் சினிமாவாடா முக்கியம்? உனக்கு இந்த சினிமா பாக்கணும்னா என் ரூமுக்கு வா. நான் டௌன்லோடு பண்ணி வெச்சிருக்கேன்."

ஆனந்த் அப்பாவித்தனமாக, "இந்தப் படம் இன்னிக்குத்தானே ரிலீஸ்?"

"ஆமா... ஆனா இப்பெல்லாம் சூட்டிங் முடிஞ்சதும் ஃபிலிம் ரோல் லேபுக்குப் போகுதோ இல்லையோ. இண்டர்நெட்டுக்கு வந்துடுது... இப்ப அதுவா முக்கியம்... போடா. போய் டிக்கெட் விடு தூது நடத்து."

"சரி. அந்தப் பொண்ணுங்க கிட்ட டிக்கெட் இருந்தா?"

"எங்களுக்கு டிக்கெட் கிடைக்கலை. உங்ககிட்ட எக்ஸ்ட்ரா டிக்கெட் இருக்கான்னு கேளு? போய் பேசுடா... தானா பேச்சு வரும்..."

ஆனந்த் போர்க்களத்துக்குச் செல்லும் வீரனின் மனநிலையோடு அந்தப் பெண்களை நோக்கி அடி எடுத்து வைத்தான்.

எட்வின் சட்டென்று அவனைத் தடுத்து, "இதப் பாரு ஆனந்த். அந்த கேர்ள்ஸுக்கு டிக்கெட் கொடுத்தப்புறம், அவுங்க காசு கொடுத்தாங்கன்னா வாங்காதே!"

"ஏன்?"

"இங்க காசு வாங்குனா பாக்கறவங்க தப்பா நினைப்பாங்க... அதனால உள்ளே வந்து இண்டர்வல்ல வாங்கிக்கிறேன்னு சொல்லு."

"ஏன்?"

"அது அப்படித்தான். விஷயம் இருக்கு..."

"ஒண்ணும் தப்பா ஆயிடாதே..."

"ஏண்டா... உன்னை என்ன கராச்சிக்கு அனுப்பறமா? இல்ல கந்தஹாருக்கு அனுப்பறமா? போடா... போ."

ஆனந்த் செலுத்தப்பட்டவனைப்போல் அந்தப் பெண்களை நோக்கி நகர்ந்தான்.

**(தொடரும்)**




**"அந்தப் படப்பிடிப்பில் ஹீரோ மலை மேல இருந்து விழற சீன்ல நிஜமாவே விழுந்துட்டாரே! அப்புறம் எப்படிங்க பொழைச்சார்!"**

**"நல்லவேளை கேமராமேன் அந்தக் காட்சியை ஸ்லோமோஷன்ல எடுத்ததால தப்பிச்சாராம்?"**

- மு. திருமேனி

# லவ்வர்ஸ் ஜோக்!

ஒரு ஜோக் படத்தைப் போட்டுட்டு
நீங்க மாத்தி யோசிச்சு கிச்சுகிச்சு
மூட்டுங்களேன்னு சொன்னதுதான் தாமதம்....
அடேய்ங்கப்பா...
செலக்ட் பண்றதுக்குள்ளே
தாடியே வளர்ந்துட்டது.
சபாஷ் வாசகர்களே!
இதோ செலக்ட்டான ஜோக்ஸ்...

''எனக்காக இத்தனை நாளா காத்திருக்கீங்களே, அடுத்த ஜென்மத்திலேயும் நீங்கதான் எனக்கு லவ்வரா அமையணும்.''

''புருஷனா எந்த ஜென்மத்திலே அமையறது?!''

**- 'பாபு' கே. அருள்சாமி, பாபநாசம்**

''உங்ககிட்ட ஏதாவது ஒரு வளர்ச்சியைப் பார்த்தப்புறம்தான் கல்யாணத்துக்கு சம்மதிப்பேன்னு நான் சொன்னது வாஸ்தவம்தான். ஆனா நான் சொன்னது தாடியோட வளர்ச்சின்னு தப்பா புரிஞ்சிக்கிட்டீங்க போல!''

**- ராகேஷ், அசோக் நகர்**

''ஆனாலும் ரொம்ப மோசங்க நீங்க! சுண்டல் காரனுக்கு மாசக் கடன் வெச்சுட்டு இப்படி மாறுவேஷத்துல வர்றது நல்லா இல்லீங்க!''

**- கே. ராமச்சந்திரன், சென்னை**



5 in 1

''எதுக்குத் திமிர்னு தாடி வளர்க்கிறீங்க? ஏதாவது வேண்டுதலா?''

''அட! கரெக்டா கண்டுபிடிச்சிட்டியே! உனக்குக் கல்யாணம் ஆனா கோயில்லே மொட்டை போடறதா வேண்டியிருக்கேன்.''

**-காயல் ஹாஜா, காயல்பட்டினம்**

''ஸாரி டியர், நாம் சனிக்கிழமை மீட் பண்ணுவோம்னு சொன்னேனே தவிர, எந்த சனிக்கிழமைன்னு சொல்ல மறந்துட்டேன்...''

**- என். பாலகிருஷ்ணன், மதுரை**

கனவு

பல

காட்டல்!

# நெகிழ்ச்சி ஒரு நிகழ்ச்சியல்ல!

'பெண்களுடன் கடல் கடந்து பயணம் செய்வது வழக்கம் கிடையாது' என்று பொருள்படும் ஒரு நூற்பா தொல்காப்பியத்தில் இருக்கிறது. ஆனால் ஆண்கள் பல வெளிநாடுகளுக்குத் தனியாக வர்த்தகம் சம்பந்தமாகப் போய் வந்தார்கள் என்று வரலாறு கூறுகிறது. ஆனால் வெளிநாடு சென்ற தமிழர்கள் தாங்கள் போய்ப் பார்த்த நாடுகள் எப்படி இருந்தன என்று எழுதிவைத்ததாகத் தெரியவில்லை. பாரதியார் கூடத் தம் கவிதையில் அவருடைய காலத்தில் வாழ்ந்த ஒரு பிரிட்டிஷ், ஒரு ஃப்ரெஞ்ச் எப்படித் தோற்றம் அளித்தான் என்று குறிப்பிடவில்லை. கவிதை சில சமயங்களிலாவது ஓவியப் பார்வை பெற வேண்டும். இல்லையெனில் உடை பற்றிய விவரம் தெரியாமல் போய்விடும்.



ஞானக்கூத்தன்

பழந்தமிழ் நாட்டில் வெளிநாடு சென்றவர்கள் வணிகர்களாதலால் அவர்களுக்கு எழுதிவைக்கும் ஊக்கம் ஏற்படவில்லை போலும். பின்பு எழுத்தாளர்களுக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்புகள் கிட்டவே மற்ற நாடுகளைப் பற்றிய பதிவுகள் நவீன கவிதையில் கிடைக்கத் தொடங்கின. இந்தச் சந்தர்ப்பத்தில் நகுலனின் சகோதரி திரிசடை என்ற பெயரில் அமெரிக்க அனுபவத்தைப் பற்றி எழுபதுகளில் எழுதிய கவிதைகள் நினைவுக்கு வருகின்றன. 'திரிசடை' என்ற அரக்கியின் பெயரை அவர் தம் புனைபெயராகக் கொண்டதைப் பாராட்ட வேண்டும்.

எழுபதுகளுக்குப் பிறகு நல்ல கவிஞர்கள் வெளிநாட்டில் வாழும் வாய்ப்பு தமிழுக்குக் கிடைத்திருக்கிறது. இவர்களில் ஒருவர் ஆர். ராதாகிருஷ்ணன். ராதாகிருஷ்ணனின் 'நெகிழ்ச்சி ஒரு நிகழ்ச்சியல்ல' என்ற கவிதைத் தொகுப்பில் 'ஒரு சந்திப்பு' என்ற கவிதை ஓர் அருமையான, அழகிய கவிதை. அதன் சர்வதேசியத் தன்மை வியப்பைத் தருகிறது. குப்பைகளை அகற்றி எடுத்துப் போக வந்த தொழிலாளியுடன், வீட்டுக்காரர் நடத்தும் உரையாடலே கவிதையாக அமைந்திருக்கிறது. இருவருடைய மனநிலையும் தெளிவாகக் காட்டப்படுகிறது. தொழிலாளியின் உலக ஞானம், அரசியல் அறிவு முதலியன தவறாமல் கூறப்படுகின்றன. குப்பை அகற்றும் அமெரிக்கத் தொழிலாளி சராசரிக்கு மேற்பட்ட அறிவாளியாக இருக்கிறான் என்பது கவனத்துக்குரியது.

8

## அலறல்

ஏன் சர்க்கார் உள்பட
எல்லோரும் ஏழைகளை,
வேலை இல்லாதவர்களைக்
கயவர்களாக,
குற்றவாளிகளாகக்
கருதி வெறுக்கிறார்கள்
அவர்களைக் கண்டு அருவருத்து
அஞ்சி விலகுகிறார்கள்

என்று தொழிலாளி கேட்கிறான்... இந்தப் பகுதி நமது பாராட்டைப் பெறுகிறது, இந்த அவதானிப்பின் சர்வதேசியத் தன்மைக்காக.

**பி**ற நாட்டு ஓவியம், சிற்பம் முதலிய கலைகள் பற்றிய குறிப்புகள் இலக்கியத்தில் காணப்படுவது அரிது. தவறிப்போய் யாராவது ஒருவர் மோனாலிசாவைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கலாம். ராதாகிருஷ்ணன் கவிதையில் பிற நாட்டு ஓவியமும் குறிப்பிடப்படுகிறது. அப்படி அமைந்த அற்புதமான கவிதைதான் 'அலறல்'.

அலறல்
எட்வர்டு முன்ச்சின் மறக்க
முடியாத
ஓவியம்: 'அலறல்' எனப்
பெயர்
பெற்றது. அவ்வளவுதான்.
ஒன்றுமே சொல்ல
இயலாத
இந்த ஓவியத்தைப்
பற்றி பல
புத்தகங்கள்,
அதற்கும் மேலே
கட்டுரைகள்,
விவாதங்கள்
ஆத்ம ப்ரகடன
வாதம் என்ற கலை சித்
தாந்தம்


■ எட்வர்டு முன்ச்

அன்று பஸ்ஸில்
ஜன்னலோரமாக
அமர்ந்திருந்தவரின் வாய்
முற்றிலும்
திறந்த வண்ணமாகவே
இருந்தது.
கடைசி ஸ்டாப்பில்
இறங்கப் போன நான்
அவரை எழுப்பலாமென்றால்
அவர் உயிர் பிரிந்துவிட்டிருந்தது.

கவிதையைப் பார்க்கப்படுவதும் (த்ருஸ்ய) கேட்கப்படுவதும் (ஸ்ரவ்ய) என இரண்டு வகைகளாக்குகிறது ஸம்ஸ்கிருதம். ராதாகிருஷ்ணனின் 'அலறல்' இந்தக் கருத்தை நிலைநாட்டுகிறது.

குறிப்பு: முன்ச், காண்டின்ஸ்கி, வான் கோக் ஆகிய மூவரும் ஆத்ம ப்ரகடனவாத ஓவியர்களாகக் குறிப்பிடப்படுகிறார்கள்

**(அடுத்த வாரம் பார்ப்போம்...)**



இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் பரிசு ரூ.50/- சன்மானம் உண்டு!







# 'யூத்'களின்

**எ**னக்கு மிகவும் பிடித்த, நான் அடிக்கடி முணுமுணுக்கும் பாடல் சமீபத்தில் வெளிவந்த 'நான் மகான் அல்ல' திரைப்படத்தில் இடம் பெற்ற,

*'வா வா நிலவப் புடிச்சித் தரவா*
*வெள்ளி பொம்மையாக்கித் தரவா'* பாடல். மனத்தை வருடும் வரிகளும், இசையும்! வாவ்! லவ்லி!

நடிகர் கார்த்தி குழந்தையின் மூக்கைத் துடைத்த விரலைப் பார்த்து ஒரு முழி முழித்துவிட்டு ஷர்ட்டில் துடைத்துக் கொள்ளும் காட்சி குறும்புக் கவிதை!

'வா வா கட்டலாம் அன்பால் படிக்கட்டு' எனும் பொடிசுகளின் கோரஸ், பாடலுக்கு மற்றுமொரு ப்ளஸ்.

**- சித்ரா கென்னடி, நாகர்கோவில்**

**'உ**ன்னால் முடியும் தம்பி தம்பி. அட, உனக்குள் இருக்கும் உன்னை நம்பி' இசை: இளையராஜா, பாடல்: வைரமுத்து, நடிப்பு: கமலஹாசன்.

பாடலின் இடையே
'நாளைய நாட்டின் தலைவனும் நீயே...
நம்பிக்கை கொண்டு வருவாயே...
உனக்
கென ஓர் சரித்திரமே
எழுதும் காலம் வரும்' என்ற





# எனக்குப் பிடித்த பாடல்



ஸ்ரீகாந்த் - சிநேகா நடித்த 'பார்த்திபன் கனவு' திரைப்படத்தில் இடம் பெற்ற பாடலான 'ஆலங் குயில் கூவும் ரயில்' என்ற பாடல் மிகவும் பிடிக்கும். வித்யாசாகரின் கர்நாடக இசையும், கபிலனின் கலை நயமான கவிதை வரிகளும் என்னை எப்போதும் உற்சாகத் தாலாட்டை உள்ளுக்குள் உண்டு பண்ணும். குறிப்பாக 'ஆஆ... செல்ஃபோன்' என்று ஸ்ரீகாந்த் கேட்க, பெண் குரல், 'இசைக்குயில் நம்மை அழைத்திடும்போது தொலைவினில் இருந்தாலும் தொடுவோம் நாமே' என்று பாடி முடிக்கும் கபிலனின் வரிகள் என்னை மிகவும் கவர்ந்தவை. அதனால்தான் அந்த வரிகளை மட்டும் கட் செய்து எனது செல் ஃபோன் ரிங்டோனாக வைத்துப் பலரையும் கவரச் செய்துள்ளேன்.

**- சின்னமனூர் எஸ். ராஜமழை**

# தேசியகீதம்!

வைர வரிகள் இளைஞர்களுக்கு மாணவர்களுக்கு ஒரு தன்னம்பிக்கையைக் கொடுப்பதாக உள்ளது. பாடலின் மற்றொரு சிறப்பம்சம் கமலஹாசன் இந்தப் பாடலுக்காக நடித்தது. இந்தப் பாடல் 'பூக்களின் தேசிய கீதம்' எனலாம்.

**- எம். கனிமொழி, சாத்தூர்**



முத்து திரைப்படத்தில் இடம்பெற்ற 'ஒருவன் ஒருவன் முதலாளி...' என்கிற பாடலில், 'பூக்களைப் பறித்திட கோடாலி தேவையில்லை... அதேபோல பூமியை வென்றிட போர்க்களம் தேவையில்லை. அன்பு பாதையே அகிலத்தை வெல்ல வல்லது' என்பது போன்ற அற்புதமான கருத்துகளை இனிமையான இசையில் குழைத்துத் தந்திருக்கும் இந்தப் பாடல், வாழ்க்கைக்கான ஒரு பாடத் திட்டம். வைரமுத்துவின் வைர வரிகளுக்கு ஏ.ஆர்.ரஹ்மான் தம் இசையால் பட்டை தீட்டியிருப்பது விசேஷம்.

**- பி.கோபி, கிருஷ்ணகிரி**

**வாசகர்களே! உங்களுக்குப் பிடித்தமான பாடல் என்னவென்று 10 வரி கமெண்ட்டுடன் எழுதி அனுப்புங்க... kalki@kalkiweekly.comக்கும் அனுப்புங்க.**

தாமரை யாத்திரை நவம்பர் பத்தொன்ப தாம் தேதியன்று சென்னை, திருவெற்றியூர் பகுதியில் தொடங்கப்பட்டு மதுராந்தகம், ஸ்ரீ பெரும்புதூர், செஞ்சி, விழுப்புரம், வந்தவாசி, சிதம்பரம், நாகை, திருவாரூர், மன்னார்குடி, பட்டுக்கோட்டையைத் தொடர்ந்து ஒரத்த நாடு வந்தபோது, யாத்திரைக்குத் தலைமையேற்றுள்ள தமிழக பாரதிய ஜனதா கட்சி மாநிலத் தலைவர் பொன்.ராதாகிருஷ்ணனை சந்தித்துப் பேசினோம்:

**என்ன... திடீர்னு இப்படி யாத்திரை தொடங்கிட்டீங்க?**

''திடீர் யாத்திரை அல்ல இது. பாரதிய ஜனதா கட்சியின் திட்டமிட்ட யாத்திரை. பொதுமக்கள் நலன் காக்க வேண்டி நடத்தப்பட்டு வருகிறது. 'தாமரை யாத்திரை' ஜனவரி 29 அன்று சென்னையில் நிறைவு பெறவுள்ளது.''

**தமிழகத்தில் தாமரை யாத்திரைக்கு அப்படி என்ன அவசியம்?**

''ஏழை இந்து மாணவர்களுக்கும் கல்வி உதவித் தொகை கிடைத்திட, விவசாயிகள் பிரச்னைகளுக்கு நிரந்தரத் தீர்வு கண்டிட, விஷம்போல் ஏறிடும் விலைவாசி உயர்வினைத் தடுத்திட, கோயில் - கோயில் சொத்துக்கள் பாதுகாத்திட, நல்லாட்சி அமைந்திட என்று ஐந்து அம்சங்களைப் பொதுமக்கள் மத்தியில் முன்னிறுத்திதான் இந்த யாத்திரை.''

**யாத்திரையில் எதனை 'ஹை லைட்' பண்ணி பேசி வருகிறீர்கள்?**

''பெரும்பான்மை இந்துக்களின் வாழ்வுரிமைகளை மீட்டுத் தருவதற்கான யாத்திரை இது. இதில் ஏழை இந்துக்களின் பிள்ளைகளுக்கு மத்திய - மாநில அரசின் கல்வி உதவித் தொகை வழங்க வேண்டும் என்பதே முக்கிய கோரிக்கை. 2007 லிருந்து கிறிஸ்தவ - முஸ்லிம் மாணவர்களுக்கு மத்திய - மாநில அரசுகள் ஏராளமான அளவில் கல்வி



# "ஆட்சி மாற விழிப்புணர்வு பயணம்!"

உதவித்தொகை வழங்கி வருகின்றன. அதுபோல ஏழை இந்துக்கள், தலித் இந்துக் கள் மாணவர்களுக்கும் கல்வி உதவித் தொகை வழங்க வேண்டுமெனக் கோரி வருகிறோம்.''

**இக்கோரிக்கையினால் பா.ஜ.க. மீது சிறுபான்மை இன மக்களின் வெறுப்பு அதி கரிக்குமே...?**

''கிறிஸ்தவ - முஸ்லிம் மாணவர்களுக்குக் கல்வி உதவித்தொகை வழங்காதே... அல் லது வழங்கக் கூடாது என்பது பா.ஜ.க.வின் கோரிக்கை அல்ல. அவர்களுக்குத் தந்து வருவது போல, எங்கள் இந்து மாணவர் களுக்கும் வழங்குங்கள் என்று கோருவது தவறில்லையே.''

**பா.ஜ.க.தவிர தமிழ்நாட்டில் வேறு எந்தக் கட்சியுமே இதனை முன்வைத்துப் பேசுவதில்லையே...?**

''எல்லாம் தேர்தலின்போது வோட்டு செய்யும் மாயம். விரிவாகப் பேசினால் கிறிஸ்தவ - முஸ்லிம் வோட்டுகள் விழாமல் போய் விடும் என்கிற பயம். பா.ம.க., விடுதலைச் சிறுத்தைகள், புதிய தமிழகம் ஆகியவை உட்பட ஏழை இந்துக்களுக் காகவும், தலித்துகளுக்காகவும் குரல் தராமல் மௌனம் காத்து வருகின்றன.''

**தமிழக சட்டமன்றத் தேர்தல் நெருங்கி வரும் வேளையில், தாமரை யாத்திரையின் பங்கு?**

''தி.மு.க. அரசின் ஒரு கிலோ அரிசி ஒரு ரூபாய்க்கு என்பது, ரேஷன் அரிசி கடத் தலுக்கு மட்டுமே பயன் தந்து வருகிறது. விஷம்போல் விலைவாசி ஏறுமுகமாக இருந்துகொண்டே வருகிறது. ஒரு ரூபாய்க்கு அரிசி வாங்குகிற குடும்பத்துக்கு, சாதாரண ஒரு வெறும் ரசம் வைத்துச் சாப்பிட வேண்டு மென்றால், ரசம் வைக்க இருபது ரூபாய் செலவாகிறது. ஒரு ரூபாய்க்குப் பூண்டு கிடைக்கவில்லை. அதன் விலை ஆப்பிளை விட மிக அதிகம். விலைவாசி உயர்வு, ஸ்பெக்ட்ரம் ஊழல், டாஸ்மாக் விற்பனை உயர்வு என வீழ்ச்சியின் விளிம்பில் நின்று கொண்டிருக்கிறது தி.மு.க. அரசு. வரும் சட்டமன்றத் தேர்தலில் ஆட்சி மாற்றத்துக் கான விழிப்புணர்வு பயணம்தான் இந்தத் தாமரை யாத்திரை.''

சந்திப்பு : **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# 'டெலி' நோக்குப்*

ஸ்பெக்ட்ரம் புகழ் ஆ.ராசா, அவரது நெருங்கிய உறவினர்கள், நண்பர்கள், அதிகாரிகள் வீடுகளில் இந்த மாதம் சி.பி.ஐ. நடத்திய ரெய்டு நிஜமாகவே உண்மைகளைத் தோண்டுவதற்கு நடந்ததா, அல்லது அடிக்கிற மாதிரி அடி, அழுகிற மாதிரி அழுகிறேன் என்ற கண் துடைப்பு ஏற்பாடா என்ற சந்தேகத்தை எதிர்க்கட்சிகள் எழுப்பியிருக்கின்றன.

இரண்டு வருடங்களுக்கு முன்பே செய்திருக்கவேண்டிய ரெய்டுகளை இப்போது செய்தால் என்ன சிக்கும் என்ற நியாயமான கேள்வி எழுகிறது. தமிழில் ராசா எழுதி வைத்த சங்கேதக் குறிப்புகள் உள்ள டயரி சி.பி.ஐ.யிடம் சிக்கியிருப்பதாக உறுதியாகாத செய்திகள் சொல்கின்றன. அப்படி ஒரு டயரியை இத்தனை காலம் ராசா தம் வீட்டிலேயே வைத்திருந்தது உண்மையென்றால், தம்மீது யாரும் கைவைக்க முடியாது என்று அவருக்கு இருந்த தன்னம்பிக்கையையும் அரசியல் செல்வாக்கையும்தான் அது காட்டும். அல்லது இப்போது ரெய்டில் என்னை மாட்டினால், நீங்களும் அழிவீர்கள் என்று இன்னும் மாட்டாதவர்களை மிரட்டுவதற்காக வேண்டுமென்றே டயரியைச் சிக்க வைத்திருக்க வேண்டும்.

இந்த ஊழலில் கடைசியில் உண்மை வெளியாகி அயோக்கியர்கள் எல்லோரும் பிடிபட்டு, சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டு தேசத்தின் பணம் மீட்கப்படுமா என்பது இன்னும் கேள்விக் குறிதான். இதுவரை நடந்துள்ளவைகூட, உச்ச நீதிமன்றத்தின் உத்தரவுகளினாலேயே நடந்துள்ளன.



ஞாநி

இரு வருடங்களாக ராசா தொடர்பான முறைகேடுகளை. பயனீர் ஆங்கில ஏட்டில் நிருபர் கோபிகிருஷ்ணன் விவரமாக எழுதி வந்திருக்கிறார். தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் அவற்றைக் கண்டுகொள்ளவே இல்லை. அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

**டிசம்பர் 11,2008 :**

ராசா 2004ல் சுற்றுச்சூழல் அமைச்சராகப் பொறுப்பேற்ற நான்கு மாதங்கள் கழித்து உருவான நிறுவனம்தான் கிரீன் ஹவுஸ் ப்ரமோட்டர்ஸ். இதன் முதலீடு வெறும் ஒரு லட்சம் ரூபாய்கள். ராசாவின் நண்பர் சாதிக் பாஷா நிர்வாக இயக்குனர். பாஷாவின் மனைவி, ராசாவின் சகோதரர் கலியபெருமாள், மருமகன் பரமேஷ் குமார், ராசாவின் மூத்த சகோதரர் ராமசந்திரனின் மகன் ராம் கணேஷ், மருமகள், உறவுமுறையினர் பலரும் இதில் இயக்குனர்கள். கம்பெனி தொடங்கி 14 மாதங்களில் அதன் முதலீடு மூன்று கோடி ஆகிவிட்டது. ராசாவின் மனைவி பரமேஸ்வரி பிப்ரவரி 2007ல் இயக்குனராக்கப்பட்டார். நிறுவனம், அமைச்சர் ராசாவின் அதிகாரபூர்வமான



* கோபாலகிருஷ்ணன்




வீட்டு முகவரியிலிருந்தே இயங்கி வருகிறது. விதிகளின்படி ராசா இந்தத் தகவல்களை பிரதமரிடம் தெரிவிக்கவே இல்லை. அமைச்சர் சிவராஜ் பட்டீலின் மகன் சம்பந்தப்பட்ட நிறுவனம் அவர் முகவரியில் இயங்கிவருவது பற்றி செய்தி வெளியானதும் ராசா திடுக்கிட்டார். அதையடுத்து ராசாவின் மனைவியின் பங்குகள் ராசாவின் மருமகனாகிய அரசு வழக்கறிஞரின் மனைவி மலர்விழிக்கு மாற்றப்பட்டன.

திடீரென்று நான்கே வருடங்களில் தி.நகர் கனரா வங்கிக் கிளை கணக்கில் இந்த கம்பெனிக்கு 150 கோடி ரூபாய் வரவு மத்திய கிழக்கு நாடுகள், ஹாங்காங், சிங்கப்பூர் நாடுகளிலிருந்து வந்தது. கம்பெனி சிங்கப்பூரிலும் கிளை தொடங்கியது.

# பார்வை



கிரீன்ஹவுஸ் கம்பெனி தொடங்கி சில மாதங்களிலேயே இன்னொரு கம்பெனி தொடங்கப்பட்டது. இதிலும் ராசாவின் மனைவியும் இதர உறவினர்களும் முக்கியஸ்தர்களும் இயக்குனர்கள். இந்த முறையும் விதிப்படி பிரதமருக்கு ராசா தகவல் தெரிவிக்கவில்லை. இந்த கம்பெனியும் நில பேர வர்த்தகத்தில் ஈடுபட்டது. முதல் வருடத்திலேயே இதில் 755 கோடி ரூபாய்கள் புரண்டன!

**டிசம்பர் 16,2008:**

அந்த கம்பெனியின் பெயர் ஈக்வஸ் எஸ்டேட்ஸ். என்ன தயாரித்தார்கள், என்ன விற்றார்கள், என்ன சேவை வழங்கினார்கள், எங்கிருந்து இவ்வளவு பணம் வந்தது என்ற விவரங்கள் பதிவாளருக்கு 23 ஏசி படிவத்தில் சட்டப்படி தெரிவிக்கப்படவில்லை.

அலைக்கற்றை 2ஜி லைசன்ஸை சர்ச்சைக்குரிய விதத்தில் பெற்ற ஸ்வான் டெலிகாம், கிரீன்ஹவுஸ் கம்பெனியில் ஆயிரம் கோடி ரூபாய் விலையில் 49 சதவிகிதப் பங்குகளை வாங்கப்போவதாகக் கூறப்படுகிறது. இது பற்றி பயனீர் நிருபர் ஃபோனில் கேட்டபோது யார் முதலீடு செய்யப் போகிறார்கள் என்று தெரிவிக்க முடியாது என்று சாதிக் பாஷா, கம்பெனி ஆலோசகர் கெவின், ஸ்வான் டெலிகாம் கம்பெனியின் நிர்வாக இயக்குனர் ஷாஹித் பல்வா மூவரும் மறுத்துவிட்டனர். ஸ்வான் கம்பெனி அக்டோபரில் 13 வட்டங்களுக்கான லைசன்ஸை 1537 கோடி ரூபாய்களுக்கு வாங்கிய சில வாரங்களிலேயே தம் 45 சதவிகிதப் பங்குகளை ஐக்கிய அரபுக் குடியரசு டெலிகாம் கம்பெனியான எடிசலாட்டுக்கு 4500 கோடி ரூபாய்க்கு விற்றிருக்கிறது.

இன்னொரு நில பேர கம்பெனியான யூனிடெக்கும் 22 வட்டங்களுக்கான லைசன்ஸை 1651 கோடிக்கு வாங்கிய சில வாரங்களில் தம் கம்பெனியின் 60 சதவிகிதப் பங்குகளை நார்வே கம்பெனியான டெலினாருக்கு 6120 கோடிக்கு விற்றுவிட்டது. டெலினார், பாகிஸ்தானிலும் வங்க தேசத்திலும் இயங்கும் கம்பெனி. ராசா டெலிகாம் மந்திரியான இரு வருடங்களில்

பல நில பேர கம்பெனிகள் டெலிகாம் துறைக்கு வரத் தொடங்கின. விதிகள் பல மீறப்பட்டன. இது பற்றி பிரதமரிடமே பழைய டெலிகாம் கம்பெனிகள் புகார் செய்தன. டெலிகாம் துறையில் ஏகபோகத்தை நீக்கவே, தாம் இப்படிச் செய்வதாக ராசா கூறினார். தமக்கும் கிரீன் ஹவுஸ் கம்பெனிக்கும் தொடர்பில்லை என்று மறுத்தார். தம் மனைவி இயக்குனர்(சட்டம்) என்ற பொறுப்பையே வகித்ததாகத் தெரிவித்தார். அவருக்கு கம்பெனியில் பங்கு இல்லை என்று சாதிக்பாஷா கூறினார்.



நீரா ராடியா

**டிசம்பர் 18,2008:**

**ஸ்**பெக்ட்ரம் லைசன்ஸ் முறைகேட்டில் அமைச்சர் ராசாவின் ராஜினாமா கோரி பெரும் சர்ச்சை உள்ளது. இப்போது அவர் அரசின் பி.எஸ்.என்.எல். கம்பெனிக்குச் சொந்தமான அலைக்கற்றையைத் தமக்கு வேண்டிய ஸ்வான் கம்பெனிக்கு ஏறத்தாழ இலவசமாகத் தர வழி செய்துள்ளார். வட்டங்களுக்கிடையிலான உலாவும் வசதிக்கான ஒப்பந்தம் என்ற பெயரில் ஸ்வானுக்கு பி.எஸ்.என்.எல்லின் சேவை வசதி தரப்பட்டுள்ளது. செப்டம்பர் 13 அன்று போடப்பட்ட இந்த ஒப்பந்தத்தில் ஸ்வானுக்கு எந்தக் கட்டணமும் விதிக்கப்படவில்லை. பி.எஸ். என். எல். தலைவர் கோயல், கட்டணம் பின்னர் பார்த்துக் கொள்ளப்படும் என்றார். இந்த ஒப்பந்தத்தைக் காட்டித்தான் ஸ்வான் தம் பங்குகளை எடிசலாட்டுக்கு விற்றிருக்கிறது. இந்த ஒப்பந்தத்தை எதிர்த்த பி.எஸ்.என்.எல். அதிகாரிகள் குஷ்வாஹாவும் ஜாவும் இடம் மாற்றப்பட்டுள்ளனர்.

**ஜனவரி 12,2009**

**ரா**சா சுற்றுச்சூழல் அமைச்சராக இருந்த போது அவரது உறவினர் ஸ்ரீதர் அதே அமைச்சகத்தில் டெபுடி டைரக்டர் பதவிக்கு நியமிக்கப்பட்டார். கோவை ஷெல்ட்டர்ஸ் கம்பெனியில் 15 சதவிகிதப் பங்குகளுடன் தான் இயக்குனராக இருப்பதை அவரும் ராசாவும் பிரதமரிடம் மறைத்துவிட்டனர். ஜனவரி 2007ல் தொடங்கிய இந்த கம்பெனியின் தலைவர், ராசாவின் பெரம்பலூர் நண்பரான டாக்டர் சி.கிருஷ்ணமூர்த்தி.

தற்போது திருவள்ளுவர் பல்கலைக்கழகத் துணைவேந்தராக இருக்கும் கண்ணனிடம் பி.எச்.டி., செய்த ஸ்ரீதர், அவரிடம் ஐந்தாண்டுகள் பணி செய்ததாக போலிச் சான்றிதழ் கொடுத்து அரசுப் பதவியைப் பெற்றுள்ளார். ராசாவின் மருமகள்கள் ஆனந்தபுவனேஸ்வரி, சந்தானலக்ஷ்மி ஆகியோருக்கும் கோவை கம்பெனியில் தலா 15 சதவிகிதப் பங்கு உள்ளது. கம்பெனியின் தலைவர் கிருஷ்ணமூர்த்தியின் கட்டடத்தில்தான் ராசா வக்கீலாக இருந்தபோது ஆபீஸ் வைத்திருந்தார். இந்த கம்பெனிகள் எல்லாம் ராசா அமைச்சரானதும் தொடங்கப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

**ஜனவரி 29,2009:**

**வெ**றும் ஒரு லட்ச ரூபாய் மட்டுமே முதலீட்டில் நான்கு மாதங்களுக்கு முன்பு தொடங்கப்பட்ட ஜெனெக்ஸ் எக்சிம் வென்ச்சர்ஸ் என்ற தமிழ்நாட்டு கம்பெனிக்கு ஸ்பெக்ட்ரம் லைசன்ஸ் உள்ள ஸ்வான் கம்பெனியின் 380 கோடி ரூபாய் பங்குகள் தரப்பட்டுள்ளன.

கீழக்கரையைச் சேர்ந்தவர்களான முகமது ஹாசன், அகமது ஷகிர் இதன் இயக்குனர்கள். ஸ்வான் போர்டில் எக்சிம் சார்பாக இருப்பவர் சையத் சலாவுதீன்.

அகமத் சையத் சலாவுதீன் துபாயில் இருக்கும் தமிழர் சையத் முகமது சலாவுதீனின் மகன். சையதின் ஈ.டி.ஏ அஸ்கான் ஸ்டார் குழுமம் தமிழ்நாட்டில் பல நில பேர கம்பெனிகளை தி.மு.க ஆட்சிக்கு வந்த பின்னர், ராசா சுற்றுச்சூழல் அமைச்சரானதும் தொடங்கியது. தமிழ்நாட்டில் 3750 கோடி ரூபாய் மதிப்பில் காஞ்சிபுரம் அருகே 500 ஏக்கரில் ஐ.டி மண்டலம் தொடங்க அரசுடன் ஈ.டி.ஏ. மே மாதம் 2007ல் ஒப்பந்தம் போட்டது. இந்த நிகழ்ச்சியில் முதல்வர் கருணாநிதி கலந்து கொண்டார். இவ்வளவு பெரிய கம்பெனி ஏன் வெறும் ஒரு லட்ச ரூபாய் முதலீடு உள்ள ஜெனெக்ஸைக் கொண்டு ஸ்வான் நிர்வாகத்தில் நுழைய வேண்டுமென்பது மர்மமாக இருக்கிறது. ஸ்வானின் 10 சதவிகிதப் பங்கை வாங்க ஜெனெக்ஸுக்கு எங்கிருந்து வருவாய் என்று கேட்டால் பதில் தர மறுத்துவிட்டார்கள்.

**இந்த வாரத் திட்டு!**

இலங்கையில் தமிழ் தேசிய கீதத்தை நீக்கியதற்காக ராஜபக்ஷே அரசுக்கு இ.வா.தி.



முன்னதாக கிரீன்ஹவுஸ் கம்பெனியில் பங்கு வாங்க ஸ்வான் முற்பட்டதை பயனீர் அம்பலப்படுத்தியதும் அம்முயற்சி கைவிடப்பட்டது.

**மார்ச் 5, 2009:**

அமைச்சர் ராசாவின் நண்பர்களின் கம்பெனிக்கு பி.எஸ்.என்.எல். கம்பெனியின் வைமேக்ஸ் சேவைகள் குறைந்த விலைக்குத் தரப்பட்டுள்ளன. வெல்காம் கம்யூனிகேஷன்ஸ் என்ற கம்பெனிக்கு வருவாயில் 75 சதவிகிதம்; பி.எஸ்.என்.எல்லுக்கு 25 சதவிகிதம் என்பது ஒப்பந்தம். செல் ஃபோனுக்கும் கணினிகளுக்கும் வயர்லெஸ் இண்டர்நெட் சேவை தருவதே வைமாக்ஸ். நவம்பர் 2008ல் விண்ணப்பித்த வெல்காம் கம்பெனிக்கு 2006ல் 10 லட்சம் முதலீடு. இது 2008ல் 10 கோடி ஆனது. ராசாவின் பெரம்பலூரர் நண்பர் செல்வராஜு என்பவரிடம் 15 சதவிகிதப் பங்குகள். இவர் இன்னொரு நண்பர் கிருஷ்ணமூர்த்திக்குச் சொந்தமான கல்குவாரியில் இருந்து கல் சப்ளை செய்யும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார். டத்தோ விஜயகுமார் ரத்னவேலு, குணசேகரன், தியாகராஜன் என்ற மலேசியத் தமிழர்கள் இயக்குனர்கள்.

**இந்த வாரத் தகவல்!**



வேண்டியவர்களுக்குக் கோடிக் கணக்கான ரூபாய் வீடுகளை ஒதுக்கிய தி.மு.க. அரசு ஒலிம்பிக்ஸில் வெண்கலப்பதக்கமும் அர்ஜுனா விருதும் பெற்ற தமிழகக் குத்துச்சண்டை வீரர் தேவராஜனை பல மாதம் அலையவிட்டு 1998ல் ஒதுக்கிய வீட்டின் படம் இது.

மேலே உள்ள செய்திகள் எல்லாம் 2008-2009ல் வெளியானவை. அப்போது ரெய்டு செய்யாமல் இப்போது செய்தால் என்ன சிக்கும் என்பது சி.பி.ஐக்கே வெளிச்சம்.

நீரா ராடியா டேப்புகளில் இருந்து துல்லியமாகத் தெரியவரும் உண்மை- தமக்கு அமைச்சர் பதவி கிடைக்காவிட்டாலும், ராசாவுக்கு டெலிகாம் அமைச்சர் பொறுப்பைப் பெற்றுத் தந்தே தீரவேண்டுமென்று கனிமொழி கடுமையாகப் பாடுபட்டிருக்கிறார். தற்கொலை செய்வேன் என்றே மிரட்டியதாக ஒரு டேப்பில் சொல்லப்பட்டிருக்கிறது.

நம் அரசியல்வாதிகளுக்குத் தொலை நோக்குப் பார்வை கிடையாது என்று யார் சொன்னது ? அவர்களுக்கு உண்டு. சி.பி.ஐக்கும் நமக்கும்தான் அதெல்லாம் கிடையாது.

# விடைபெறுகிறது

கிறிஸ்துமஸ் திருநாளின் முக்கிய அடையாளங்களில் ஒன்று கிறிஸ்துமஸ் மரம். ஆனால் சமீபகாலமாக அதைச் சுற்றி சில பரபரப்புகள் வட்டமடித்துக் கொண்டிருக்கின்றன.

1980ல் அமெரிக்கா, கனடா நாடுகளின் சில மாகாண அரசுகள் கிறிஸ்துமஸ் மரத்தை 'விடுமுறை மரம்' என்று அரசுக் குறிப்புகளில் குறிப்பிட்டன. மதத்தையும் அரசையும் இணைத்துச் செயல்பட வேண்டாம் என்ற எண்ணம்தான் இந்த மாற்றத்துக்கு அடிப்படை. ஆனால் இந்த அரசுகளுக்கு எதிராகக் கடும் எதிர்ப்பு எழுந்தது. அரசுகள் தங்கள் நிலையை மாற்றிக்கொண்டன.

2005ல் பாஸ்டன் நகர அரசு வழக்கம் போலத் தமது வளாகத்தில் பிரம்மாண்டமான ஒரு கிறிஸ்துமஸ் மரத்தைக் காட்சிக்கு வைத்தது. ஆனால் விடுமுறை மரம் என்று அதற்குப் பெயரிடப்பட்டது. இந்த மரத்தை தானமாக அளித்திருந்த விவசாயி, மனம் நொந்து போய் 'இப்படி ஒரு பெயரை வைப்பார்கள் என்று தெரிந்திருந்தால் நான் அரசுக்கு இதை தானமாக அளித்ததற்குப் பதிலாக வெட்டிப் போட்டிருப்பேன்' என்றார். நகரின் பல பகுதிகளில் கொந்தளிப்பு ஏற்பட்டது. 'விடுமுறைக்கான மரம் என்றால் ஈஸ்டருக்குக்கூட மரம் வைக்கலாமே!' என்று கண்டித்தனர்.

'லோவே' எனும் பிரபல கணினி விற்பனையாளர் தமது தயாரிப்புகளில் கிறிஸ்துமஸ் மரத்தை அச்சிட்டிருந்தார். ஸ்பானிஷ் மொழியில் கிறிஸ்துமஸ் மரம் என்றும், ஆங்கிலத்தில் 'விடுமுறை மரம்' என்றும் இது வெளியானது. இதற்குக் கடும் எதிர்ப்பு எழ, 2007ல் விடுமுறை மரம் என்பதை, குடும்ப மரம் என்று மாற்றி அச்சடித்தனர். இதற்கும் கடும் எதிர்ப்பு. உடனே அது ஓர்





# விடுமுறை மரம்!

ஜி.எஸ்.எஸ்.

அச்சுப்பிழை(!) என்று சமாளித்த நிறுவனத்தினர் அதற்குப் பிறகு கிறிஸ்துமஸ் மரம் என்றே அச்சிடத் தொடங்கினர்.

**பி**ரபல வால்மார்ட் நிறுவனம் 2005ல் தமது விற்பனைப் பொருள்களிலும் மார்க்கெட்டிங் உத்திகளிலும் கிறிஸ்துமஸ் தின நெருக்கத்தில் கூட அத்திருநாளின் பெயரைப் பயன்படுத்தவில்லை. இதற்கே பலத்த எதிர்ப்பு எழுந்தது. இதைத் தொடர்ந்து வால்மார்ட் மீண்டும் தமது பழைய உத்திகளைப் பயன்படுத்திக் கொண்டது. கிறிஸ்துமஸ் மரம் உட்பட பலவும் மார்க்கெட்டிங் உத்திகளில் மீண்டும் இடம் பெறத் தொடங்கின.

என்றாலும் மதம் என்கிற கோணத்தையும் மீறி கிறிஸ்துமஸ் விழாக் கொண்டாட்டம் என்கிற பெயரில் பல்லாயிரக்கணக்கான மரங்கள் வெட்டப்படுவது முறையா? இந்தக் கேள்வி சமீபகாலமாகப் பரவலாகவே ஒலிக்கத் தொடங்கியிருக்கிறது. காற்று மண்டலத்தில் உள்ள கரியமில வாயுவை மரங்கள் இழுத்துக் கொள்வதால் சுற்றுப்புறத்துக்குப் பெரும் நன்மை. கிறிஸ்துமஸ் மரம் என்ற பெயரில் பல மரங்கள் வெட்டப்படுவதால் சுற்றுப்புறச் சூழல் பாதிக்கப்படுகிறது. தவிர மரங்களை நடவும் வளர்க்கவும் பலவித எந்திரங்கள் தேவைப்படுகின்றன. கிறிஸ்துமஸ் மரங்களைப் பல இடங்களுக்கு எடுத்துச் செல்ல வாகனங்கள் தேவைப்படுகின்றன. எனவே எரிபொருளும் அதிக அளவில் செலவாகிறது. கிறிஸ்துமஸ் மரம் போன்ற வெறும் அலங்கார மரங்களை வளர்ப்பதற்குப் பதிலாக பயனுள்ள மரங்களை வளர்ப்பதன் மூலம் விவசாய நிலத்தை சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளலாம். கிறிஸ்துமஸ் திருவிழாவையொட்டி மரங்களை வெட்டுவது ஆரோக்கியமான செயல்பாடு அல்ல என்கிற வாதங்கள் கேட்கத் தொடங்கியுள்ளன.



ஆனால் எதிர்த்தரப்பினர் 'இந்த வேகமான உலகில் பண்டிகைகளும் திருவிழாக்களும்தான் மனிதர்களை இணைக்கின்றன. பண்டிகைகளின் சின்னச் சின்ன மரபு சார்ந்த சுவாரஸ்யங்கள்தான் மகிழ்வளிக்கின்றன. இவற்றையெல்லாம் அழித்துவிடக்கூடாது. வேறு விதத்தில் பயன்படும் மரங்களை வெட்டுவதில்லையே. கிறிஸ்துமஸ் மரங்கள் அதற்காகவே வளர்க்கப்படுபவைதானே! மரங்கள் தங்கள் ஆயுளின் ஆரம்ப வருடங்களில்தான் அதிக அளவு கரியமில வாயுவை உறிஞ்சிக் கொள்கின்றன. அந்த விதத்தில் நன்கு வளர்ந்துவிட்ட கிறிஸ்துமஸ் மரங்களைப் பயன்படுத்துகிறோம் என்பதால் பாதகம் குறைவுதான். வேண்டுமானால் கிறிஸ்துமஸ் மரங்களை வேரோடு பிடுங்கிப் பெரிய தொட்டியில் வளர்க்கலாம்' என்கின்றனர்.

சர்ச்சை தொடர்கிறது. வாங்கப்படும் கிறிஸ்துமஸ் மரங்களின் எண்ணிக்கை குறைந்ததாகத் தெரியவில்லை.

"தப்பில்லையே. பால்கோவாவைப் பார்த்தால் பரந்தாமனின் வெள்ளை உள்ளம், அவரைக்காய் பீன்ஸைப் பார்த்தால் திருமாலின் பச்சைத் திருமேனி, ஜாங்கிரியைப் பார்த்தால் ஆதி அந்தம் இல்லாத இறைவனின் தன்மை இப்படித்தானே?" என்றார் ராமநாதன்.

கொஞ்சம் சங்கடமாகச் சிரித்தான் ஜருகண்டி. "அப்படி இருந்தால் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் எனக்கு வெங்கடாஜலபதியை நினைத்தால் லட்டும், பழனி ஆண்டவரை நினைத்தால் பஞ்சாமிர்தமும்தான் நினைவுக்கு வந்து தொலைக்கும்" என்றான். அனைவரும் சிரித்தோம். என்ன இருந்தாலும் ஜருகண்டி மனத்தில் பட்டதை மறைக்காதவன்.

பண்டரிபுரத்துக்கு ஸாவ்தா மாலி செல்வதாக இல்லை. அதனால் என்ன, விட்டலன் அரணுக்கு வந்து சேர்ந்தான். விட்டலன் வந்த சூழலும், தொடர்ந்த சம்பவங்களும் அள்ளக் குறையாத பரவசம் கொள்ள வைப்பவை.



**ஸா**வ்தா மாலி எழுதிய அபங்கங்கள் இனிமையானவை. எந்தப் பாசாங்கும் இல்லாதவை. தம் தோட்ட வேலை தொடர்பாகவே அவரது அபங்க வார்த்தைகளும் அமைந்தன. விட்டலனை நினைத்து உருகினாலும் அவனை நேரடியாகத் தரிசித்தாக வேண்டும் என்று அவர் எண்ணவில்லை. 'நம் கடமையைச் செய்வோம். விட்டலன் தாமாகத் தம்மை நாடி வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி' என்ற மனப்போக்கில் இருந்தார் அவர்.

'நாமாச்சியா' என்று தொடங்கும் அபங்கத்தில் ஸாவ்தா மாலியின் தன்னம்பிக்கை, தெளிவாகவே தெரிகிறது. "என்னிடம் ஹரிநாம பலம் இருப்பதால் நான் எப்போதுமே பயப்படுவதில்லை. கலிகாலத்தின் தலையில் தடியால் அடிக்கிறேன். விட்டலனைப் பாடிக்கொண்டே ஆடியபடி அந்த வைகுண்ட வாசனை என் கீர்த்தனத்தைக் கேட்க வரவழைக்கிறேன். சுகமயமான தீபாவளி

# வியாபாரியாய் வந்த விட்டலன்

உற்சவம் கொண்டாடி விட்டலனைப் பிரியத்துடன் மனத்தில் தரிசிக்கிறேன். நீங்களும் இதுபோல் பக்தி மார்க்கத்தின் மூலமாக அவனை அணைத்துக் கொள்ளுங்கள்" என்கிறார்.

பண்டரிபுரவாசனின் நினைவுகளே போதும், பண்டரிபுரத்துக்குப் போய்தான் ஆகவேண்டும் என்பதில்லை என்றிருந்த ஸாவ்தா மாலிக்கு, நேரெதிரான எண்ணம்

கொண்டவராக இருந்தார் கூர்மதாஸர். இருவருமே ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள்.

இரு கால்களும் இல்லாத முடவராகப் பிறந்தவர் கூர்மதாஸர். ஓர் ஆமையைப்போல அவர் நகர்ந்துகொண்டிருந்ததால் இந்தப் பெயர் அவரை அடைந்தது.

சிறுவயது முதலே பாண்டுரங்கனை தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் அவருக்கு மிதமிஞ்சி இருந்தது. தம் ஊரிலோ அருகில் உள்ள ஊர்களிலோ விட்டல சங்கீர்த்தனம் எப்போது நடைபெற்றாலும் அங்கு சென்று விடுவார் கூர்மதாஸர். அவரால் மிக மெதுவாகத்தான் செல்ல முடியும். எனவே சில சமயம் ஓரிரு நாட்கள்கூட அவர் ஊர்ந்து செல்ல வேண்டியிருந்தது.



பண்டரிபுரம் செல்ல வேண்டுமென்ற ஆவல் அவரைப் பொறுத்தவரை ஒரு லட்சியமாகவே மாறியது. தம்மை சந்திப்பவர்களிடமெல்லாம் இதைப் பகிர்ந்து கொண்டார். பலர் சிரித்தார்கள். சிலர் பரிதாபப்பட்டார்கள். ஆனால் அனைவரும் கூறிய தன் சாரம் என்னவோ ஒன்றுதான். 'எல்லா உடல் உறுப்புகளும் சரியாக இருக்கும் எங்களால்கூட எப்போதோ ஒரு முறைதான் பண்டரிபுரம் போக முடிகிறது. கால்கள் இல்லாத உனக்கு இது எப்படிச் சாத்தியம்? வீண் கனவு காணாதே.'

ஆனால் இதை ஏற்றுக் கொள்ள கூர்மதாஸர் தயாராக இல்லை.

மற்றவர்கள் உதவி தேவை என்று கருதுவதால்தானே இந்தப் பிரச்னை. நாமாக பண்டரிபுரத்துக்குக் கிளம்பிவிட்டால் என்ன? சிந்தனையைச் செயல்படுத்தினார்.

கிளம்புவது கஷ்டமாக இல்லை. ஆனால் பண்டரிபுரத்தை அடைவது எளிதாக இல்லை. இரண்டு நாள் பயணத்திலேயே அவர் உடல் மிகவும் பலவீனம் அடைந்தது. வழியில் அனுமன் ஆலயம் ஒன்று தென்பட்டது. அந்தக் கோயிலின் படிகள்மீது ஏறினார். பசி அவரை வாட்டியது. தாக உணர்வு தகித்தது. ஆனால் இவற்றைவிட பண்டரிபுரத்தை அடைய வேண்டுமே என்ற லட்சிய தாகம் அவரைத் துடிக்க வைத்தது. மனம் உருகிக் கண்களை மூடி விட்டலனைத் துதித்தார்.

'துணைக்கு யாரும் இல்லாமல் கால்களை இழந்த நீங்கள் எங்கே கிளம்பி விட்டீர்கள்?' என்று யாரோ கேட்பதை உணர்ந்து கண்களைத் திறந்தார். மனித நடமாட்டமே இல்லாமல் இருந்த அந்தப் பகுதியில் இப்படி ஆதரவாக ஒருவர் கேட்டது கூர்மதாஸருக்கு ஆறுதல் அளித்தது. ஆனால் அடுத்த கணம் அவருக்குச் சோர்வும் ஏற்பட்டது. தம் பயணத்தின் நோக்கத்தைக் கூறினால் இவர் எப்படியும் சிரிக்கப் போகிறார் அல்லது சொந்த ஊருக்கே திரும்பும்படி உபதேசம் கூறப் போகிறார்! எனவே பதிலைத் தவிர்த்து தான் ஒரு கேள்வியை வீசினார்.

'நீங்கள் எங்கே போகிறீர்கள்?'

'நான் ஒரு மளிகை வியாபாரி. பண்டரிபுரத்தில் வியாபாரம் செய்கிறேன். என் பெயர் விடோபா.'

அருணா சரண்யா

என்ன, பண்டரிபுரத்திலேயே வசிக்கும் பேறு பெற்றவரா! அதற்கு மேல் பொறுக்க முடியாமல் தம் எண்ணத்தை வெளிப்படுத்தினார் கூர்மதாஸர். 'ஆஹா, நல்லதாய்ப் போயிற்று. நாம் இருவருமே சேர்ந்து பண்டரிபுரம் போலாமே. ஒருவருக்கொருவர் நல்ல வழிதுணையானது' என்றார் அந்த வியாபாரி.

தம் காதுகள் சரியாகத்தான் செயல்படுகின்றனவா? திகைப்பும் மகிழ்ச்சியுமாக கூர்மதாஸர் தவிக்க, 'எனக்குப் பசிக்கிறது. நான் கொண்டு வந்திருக்கும் உணவை



## அபங்க அமுதம்

ஆமுசீ மாளியாசீ ஜாத
சேத லாவூ பாகாயீத
ஆஹா ஹாதீ மோட நாடா
பாணீ ஜாதே புலஜாடா
சாந்தி சேவந்தீ புலலீ
ப்ரேம ஜாயீ ஜுயீ வ்யாலீ
ஸாவதானே கேலா மளா
விட்டல தேகியலா டோளா

- ஸாவ்தா மாலீ

'நான் தோட்டவேலை செய்யும் ஜாதியைச் சேர்ந்தவன். தோட்டத்தில் பயிரிடுகிறேன். என் கையில் கிணற்றிலிருந்து நீர் இறைக்க வாளியும் கயிறும் உள்ளன. பூச்செடிகளுக்கு நீர் பாய்ச்சுகிறேன். சாந்தி என்கிற சாமந்தி பூக்கிறது. அன்பு என்கிற ஜாதிமல்லி படர்கிறது. எனது தோட்டத்தை விட்டலன் கண்டு ரசிக்கிறான்.'

இருவருமாகச் சாப்பிடலாம்' என்றார் அந்த வியாபாரி.

இருவருமாக உணவு உட்கொண்டனர். பின்னர் பயணத்தைத் தொடர்ந்தனர். வழி எங்கும் உற்சாகமாகப் பேசிக்கொண்டே வந்தார் வியாபாரி. 'காலில்லாத இவனோடு நாமும் இவ்வளவு மெதுவாக நடந்து தொலைக்க வேண்டியதிருக்கிறதே என்ற அலுப்போ எரிச்சலோ இவர் முகத்தில் சிறிதும் தலைகாட்டவில்லையே' என்ற வியப்பு கூர்மதாஸருக்கு அடிக்கடி ஏற்பட்டது.

பகலில் நடப்பது. இரவில் ஏதாவது சத்திரத்தில் தங்குவது. அன்னதானம் அளிக்கப்படும் இடங்களில் சாப்பிடுவது என்று அவர்கள் பயணம் தொடர்ந்தது.

வருணாபுரி என்ற ஊரை அடைந்தபோது அந்த மாய வியாபாரி எப்படியோ மறைந்து விட்டார். முதலில் கலங்கினாலும் ஏதோ இதுவரை உதவினாரே என்று மனத்தை சமாதானம் செய்துகொண்டார் கூர்மதாஸர்.

பண்டரிபுரம் நோக்கி நடந்த பல பஜனைக் குழுவைச் சேர்ந்தவர்கள் கூர்மதாஸரைத் தாண்டிச் சென்றனர். அவரைப் பார்த்துப் பரிதாபப்பட்டனர். அவருக்கு உதவவில்லை என்றாலும் அவர்கள் மனத்தில் அந்த உறுத்தல் இருந்தது. விட்டலனின் சன்னிதியை அடைந்த அவர்கள் அவனை சேவித்தபோது, கூடவே 'பண்டரிபுரத்தை நோக்கி வந்து கொண்டிருக்கும் அந்த முடவருக்கும் அருள வேண்டும்' என்று பிரார்த்தனை செய்தனர். எப்படியும் இன்னும் சில வாரங்களில் கூர்மதாஸர் பண்டரிபுரம் வந்துவிடுவார் என்று நம்பினார்கள்.

ஆனால் கூர்மதாஸரின் ஆதங்கம் வேறாக இருந்தது. 'நாளைக்கு கார்த்திகை ஏகாதசி. நாளைக்கே விட்டலனை தரிசிக்க முடிந்தால் எவ்வளவு அருமையாக இருக்கும்! ஆனால் அது நடக்கிற காரியமா?' நடக்க இயலாத தம்மை நொந்து கொண்டு கண்ணீர் சிந்தினார் கூர்மதாஸர். உடல் வலியும் மன வலியும் அவரை அதிக அளவு வருத்தின.

'வழித்துணை வியாபாரியாக உதவியது போதாது. நேரடியாகவே சென்று கூர்மதாஸருக்கு திவ்ய தரிசனம் அளிக்க வேண்டியதுதான்' என்று தீர்மானித்தான் விட்டலன்.

'நான் சில நாட்களுக்கு வெளியூர் செல்லப்போகிறேன்' என்று விட்டலன் கூற, 'அதெல்லாம் கூடாது. எங்களுடன்தான் இருக்க வேண்டும்' என்று அன்பு கட்டளையிட்டனர் நாமதேவரும் ஞானேஸ்வரரும்.

'எப்போதும் இப்படிக் கட்டிப் போட்டால் எப்படி? மற்ற பக்தர்களுக்கும் அருள் செய்ய வேண்டாமா? ஞானேஸ்வரரையும் நாமதேவரையும் கொஞ்சம் அலைக்கழிக்கலாம்' என்று முடிவெடுத்தான் விட்டலன். விளையாடிப் பார்ப்பதில் விருப்பம் கொண்டவனாயிற்றே.

அன்று மாலை நாமதேவரும் ஞானேஸ்வரரும் விட்டலனின் சன்னதியை அடைந்தபோது ஒரு மாற்றத்தை உணர்ந்தனர். 'விட்டலன் திரு உருவச் சிலை இருக்கிறது. ஆனால் அவரது சான்னித்தியம் புலப்படவில்லையே. விட்டலன் அணியும் துளசி மாலையிலிருந்து எழும் சுகந்த நறுமணம் எங்கே போனது?' குழப்பத்துடன் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

அதே நேரம் கூர்மதாஸர் இருந்த இடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்த விட்டலனை ஓர் இனிய அபங்கம் கவர்ந்து இழுத்தது. அது ஸாவ்தாமாலியின் இனிய குரல்.



**நா**ன் தனிப்பட்ட முறையில் விசுவாச மான ஹிந்து; யோக நரசிம்மரை வழிபடு கிறவன். ஆனாலும், எப்படியோ ஒரு விதத்தில், கிறிஸ்தவ சமயப் பிரார்த்தனை முறைகளால் கவரப்பட்டிருக்கிறேன். ஒவ் வொரு புத்தாண்டின் போதும், நள்ளிரவுக்குப் பதினைந்து நிமிடங்களுக்கு முன்னால், நான் என் மனைவி குழந்தைகளோடு, எழும் பூரில் உள்ள செயின்ட் ஆன் தேவாலயத்துக் குப் போய்விடுவேன். கண்களை மூடி, கடந்த ஆண்டில் நடைபெற்ற நல்ல காரியங்களை யும், நண்பர்களையும் நினைத்து மனம் உருகிப் பிரார்த்தனை செய்வேன். இது அடுத்த புது ஆண்டுக் கான மனோதிடத்தை யும் ஆரோக்கியத்தை யும் தருகிறது என நம்பு கிறேன்.

தேவாலயப் பிரார்த் தனை முடிந்ததும் முதல் தேதி காலையில் மயி லைக் கபாலீசுவரர் கோயி லுக்குத்தான் போவேன். இந்த நியதி தவறுவதே யில்லை. ஏதோ அரி தாக, ஒன்றிரண்டு முறை மட்டும் தவிர்க்க முடி யாமல் வெளியூர், வெளி நாடு என்று இருக்க நேர்ந்த போதும், இந்த நள்ளிரவு வழி பாட்டில் நான் தவறியதில்லை. நான் சந்தித்த கிறிஸ்தவ தலைவர்கள் அநேகர். இதில் பிரதானமானவர் டி.ஜி.எஸ். தினகரன்.

அப்போது உத்தமபாளையத்தில் சகோ தரர் டி.ஜி.எஸ். தினகரன் 'இயேசு அழைக் கிறார்' சொற்பொழிவுகளை ஐந்து நாட் களுக்கு நிகழ்த்திக் கொண்டிருந்தார். வனத்துறையில் நான் வேலை பார்த்தபோது எனக்கு அதிகாரியாக இருந்த ஒருவரின் சகோதரர் தட்சிணாமூர்த்தி என்பவர், தின கரன் உரைகளால் கவரப்பட்டு மனம், மதம் மாறி, பண்ணைப்புரம் கிராமத்தில் ஒரு தேவாலயமே கட்டினார். அவர் ஏலக்காய்த் தோட்டம் ஒன்றின் உரிமையாளர்.

அந்தத் தேவாலயத்தைத் திறந்துவைக்க சகோதரர் தினகரனை அழைத்திருந்தார்கள். வனத்துறை அதிகாரி மூலமாக, என்னை யும் அந்த நிகழ்ச்சியைப் படப்பதிவு செய்ய வேண்டும் என்று அழைத்திருந்தார்கள். என்னுடைய வாழ்க்கை முறையையே மாற் றிப்போட்ட அழைப்பாக அது அமைந்தது.

சகோதரர் பால் தினகரன் முதன்முறை யாக அந்தப் பண்ணைப்புரம் நிகழ்ச்சியில் தான் மேடையேறினார். அவருடைய 'கன்னிப் பிரசங்க'மாக அது அமைந்தது.



## என் கேமராவும்

நான் படம் எடுத்த விதமும் ஓடியாடிப் பணியாற்றிய தன்மையும் டி.ஜி.எஸ்.ஸை மிகவும் கவர்ந்தது. அது முதல் கால் நூற் றாண்டுக் காலம் போல் சகோதரர் தினகர னின் நிகழ்ச்சிகளைப் படப்பதிவு செய்து தருகிற வாய்ப்பைப் பெற்றேன்.

ஜபம் செய்து, நோயைக் குணப்படுத்து கிற டி.ஜி.எஸ்.ஸின் தெய்விக ஆற்றலை நான் அந்த நிகழ்ச்சிகளில் பலமுறை கண்ட

துண்டு. என்னுடைய மனைவி சாவித்திரி இரண்டாம் முறையாகக் கருவுற்றிருந்த போது, இரட்டையா, குழந்தை பெரிதாக உள்ளதா என்றெல்லாம் நாங்கள் கவலைப் பட்டுக் குழம்பியபோது, சகோதரர் தினகர னிடம்தான் போனோம். அப்போதெல் லாம், இன்றுள்ள மாதிரி 'ஸ்கேன்' முறை பிரபலமாகியிருக்கவில்லை.

''கவலையே படாதே. இரட்டைக் குழந்தைகள் சுகமாகப் பிறக்கும்'' என்று சொல்லி எங்கள் சிரம் தொட்டு ஆசீர்வதித் தார். அப்படியே எங்களுக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தன.

பற்றி, அது இடம்பெறக்கூடிய இடம் கூட தமக்கு 'விஷன்' மூலம் வந்தது என் றும், அந்த இடத்தைக் கூடத் தாம் பார்த்திருக்கவில்லை என்றும் சொன்னார் டி.ஜி.எஸ்.

படம் எடுத்துக் கொண்டிருந்த எனக் குள் ஒரு பரபரப்பு. உடனே என் உதவியாளரை ஸ்டூடியோவுக்கு அனுப்பி, காசோலையை எடுத்து வரச்செய்தேன். அந்த அறிமுக விழா நிறைவடையும் தறுவாயில் ஆயிரம் ரூபாய்க்கு ஒரு காசோ லையை எழுதி பிரதரிடம் தந்தேன். ''இது




யாராவது அவரிடம் போய் ''பிரதர்! உங்க பிரார்த்தனையால்தான் நாங்கள் சுக மடைந்தோம்'' என்று நன்றி தெரிவித்தால் அவர் அதை ஏற்கமாட்டார். ''கடவுளுக்குத் தான் நீங்கள் நன்றி சொல்ல வேண்டும். உங்கள் பிரார்த்தனையை, உங்கள் உணர் வுடனேயே நான் அவருக்குப் பிரார்த்தனை செய்தேன். அவர்தான் செவி சாய்த்துக் குணப்படுத்தினார். அவரே நம் நன்றிக் குரியவர்'' என்று சொல்வார்.

காருண்யா நிறுவனம் தொடங்குவது

காருண்யாவுக்கு என்னுடைய நன் கொடை'' என்று சொன்னேன். அந்த அமைப் புக்கான முதல் நன்கொடையும் அதுதான்!

அந்தப் பொறியியல் கல்லூரியை தலைவர் ஜி.கே.மூப்பனார் தலைமையில் அப்போதைய மத்திய அமைச்சர் அர்ஜுன் சிங் தொடங்கிவைத்தார். அன்றைக்கும் படப்பதிவு செய்துகொண்டிருந்த என்னை மேடைக்கு அழைத்தார் டி.ஜி.எஸ்.

''இவர்தான் காருண்யாவுக்கு முதல்

நன்கொடை தந்தவர்'' என்று என்னை அவையோருக்கு அறிமுகப்படுத்தி, தலைவர் மூப்பனார் கரங்கள் மூலம் நினைவுப் பரிசு ஒன்றையும் வழங்கச் செய்தார்.

இன்னொருவர், அருள்தந்தை வின்சென்ட் சின்னதுரை. சாந்தோம் கலைத் தொடர்பு நிலைய நிகழ்ச்சிகளுக்குப் படம் எடுத்துக் கொண்டிருந்தேன். செயின்ட் தாமஸ் மவுண்ட் தேவாலயப் பொறுப்பில் அவர் இருந்தபோதிலிருந்தே எனக்குப் பழக்கம். நிறைய புத்தகங்களை எழுதியவர். கலை இலக்கிய ஈடுபாடு நிரம்பியவர்.

மிகவும் நியாயமான, கட்டுப்பாடான நிர்வாகி; மதிக்கத்தக்க அருள்தந்தை. இதைப் புரிந்துகொண்டதாலேயே கலைஞர் அரசு, சிறுபான்மையினர் நலன் குழுவுக்குத் தலைவராக்கியது என நினைக்கிறேன்.

'தமிழ் மையம்' அமைப்பு தொடங்கப்படுவதில் முக்கியப் பங்கு அருள் தந்தை வின்சென்ட் சின்னதுரைக்கு உண்டு. நேரில் அழைத்தாலே ஈகோ பார்க்கும் உலகில், தபால் மூலம் நான் அனுப்பிய என் மகளின் திருமண அழைப்பை ஏற்று, எவ்வித பந்தாவும் இல்லாமல் நேரில் வந்திருந்து மணமக்களை வாழ்த்திய எளிமை கண்டு நாங்கள் நெகிழ்ந்து போனோம்.



"என்னை யாரும் மதம் மாறும் முயற்சிகளில் ஆசை காட்டியதே இல்லை; நானும் அப்படிச் சலனமடைந்ததும் இல்லை."

அப்போஸ்தலிக் கிறிஸ்தவ அசெம்பிளியின் தலைமை நிர்வாகியாக விளங்குகிறவர் ஸாம் சுந்தரம். அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் அருள்தந்தை ஜி.சுந்தரம், வெறும் ஐந்து உறுப்பினர்களோடு தொடங்கிய இந்தத் திருச்சபை இப்போது தமிழ்நாடெங்கும் 300 கிளைகள், இருபதாயிரம் உறுப்பினர்கள் என்று விழுதுவிட்டிருக்கிறது என்றால் அதில் ஸாம் சுந்தரத்தின் ஆற்றல் புரியும்.

சம்பிரதாயமான திரு உருவங்கள் எதுவும் இல்லாமல் இவர்களுடைய பிரார்த்தனைக் கூடம் அழகாக இருக்கும். வெள்ளை ஆடையில், தரையில் அமர்ந்துதான் தியானம் செய்ய வேண்டும். அடித்தட்டு மக்களே பெரும்பான்மையினராக உள்ள திருச்சபை இது. பொருள் வசதி உள்ளவர்கள், இல்லாதவர்கள், இரு தரப்பினரையும் ஒன்று போல் நடத்துகிற இயல்பு ஸாம் சுந்தரத்தின் தனிச்சிறப்பு.

வெறும் வார்த்தைகளே வடிகாலாகப் பயன்படுகிற பிரார்த்தனை முறை என்னைக் கவர்ந்தது. ஆடம்பரமான நகைகள், அணிமணிகள் எதுவும் இல்லாமல், வெறும் பிரார்த்தனை மட்டுமே, உடல்ரீதியான மனம் சார்ந்த, பொருளாதாரப் பிரச்னைகள் உள்படத் தீர்த்து வைக்கும் என்பதில் நம்பிக்கை கொண்டது இந்த ஏ.சி.ஏ. திருச்சபை. இப்படி மதப் பாகுபாடு இன்றி, பல கிறிஸ்தவ தலைவர்களின் அன்பைப் பெற்றவன் நான்.

'இயேசு அழைக்கிறார்' அமைப்பிலும் மற்ற தொடர்புகளிலும் இத்தனை காலமாய் புழங்கிக் கொண்டிருந்தபோதிலும், என்னை யாரும் மதம் மாறும் முயற்சிகளில் ஆசை காட்டியதேயில்லை; நானும் அப்படிச் சலனமடைந்ததும் இல்லை என்பதையும் நன்றியோடு நினைத்துக்கொள்கிறேன்.

- தொகுப்பு: 'யெஸ்பால்'

# ஜே.எஸ்.ராகவன்

**கா**ரைத் திருடிய கவிஞருக்கு லண்டன் நீதிபதி கவிதையில் தீர்ப்பு.

*கச்சேரி என்பதால் மெட்டமைத்துப் பாடி வழங்கியிருக்கலாம்.*

**கூ**டைப் பந்து காயத்துக்காக ஒபாமா உதடுகளில் 12 தையல்கள்.

*உதட்டளவில் பிற 'தையல்'கள் இருப்பதால் மனைவி மிஷல் ஆட்சேபிக்கவில்லையா?*

**ஐ**ஸ்வர்யாராய் புகை பிடிக்கும் இந்தி சினிமா போஸ்டருக்கு எதிர்ப்பு...

*'ஆஷ்' என்றால் இளைஞர்களுக்கு சிகரெட் நினைவு வந்திடக்கூடாதல்லவா.*

**மு**கேஷ் அம்பானி அடுக்குமாளிகையின் செப்டம்பர் மின்சார பில் 70 லட்சம்.

*தண்ணீரிலிருந்து கிடைப்பதால் மின்சாரத்தை அருவியாகச் செலவழிக்கிறாரா?*

**மே**னகா காந்தியிடம் யானைத் தந்த நெக்லஸை விற்க முயன்றவர் கைது.

*விலங்குகளை நேசிப்பவரிடமிருந்து விலங்கா?*




**ல**ண்டன் பஸ்களில் கடவுள் இல்லை என்று எழுதலாமாம்.

*சென்னை பஸ்களில் கடவுளுக்குக் கூட இடமில்லை என்று எழுதலாம்.*




**ஈ**க்கள் தொல்லையால் சேலம் கிராம மக்கள் ஊரை விட்டு வெளியேறுகின்றனர்...

*முதியவர்களை ஈக்களே தூக்கிக் கொண்டு போய் விட்டுவிடும்!*

**ப**ள்ளிக்குக் குதிரையில் வரக் கூடாது என ஃபிலடெல்ஃபியா மாணவனுக்கு எச்சரிக்கை.

*மீறி வந்தால் லாடம் கட்டி விடுவதாகவும் பயமுறுத்தப்பட்டதா?*

**செ**ன்னை கே.கே. நகரில் கிளி ஜோஸ்யர்கள் அதிகமாம்.

*இனி அதை கி.கி. நகர் என்று அழைக்கலாமே!*

**ம**ரணத்தைப் பத்து வருடம் தள்ளிப் போடும் மாத்திரை வருகிறதாம்.

*இந்த மாத்திரைக்கு எக்ஸ்பயரி தேதி இருக்கக் கூடாது.*



# ஈஸி போட்டி சில்கி சாரி!



## நவம்பர் மாதத்துக்கான பட்டுப் புடைவைப் போட்டி முடிவு!

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு' தொடரில் இடம் பெற்ற போட்டியில் பங்கேற்ற ஆயிரக் கணக்கான வாசகர்கள் அனுப்பி இருந்த விடைக் குவியல்களில் இருந்து சரியான விடையை எழுதியவர்களைத் தேர்வு செய்து, பின்னர் குலுக்கல் முறையில் மூன்று வாசகர்களை அதிர்ஷ்டசாலிகளாக அறிவித்து அவர்களுக்குத் தலா ஒரு பட்டுப் புடைவை வீதம் பரிசளிக்கப்படுகிறது.

**கேள்விகள்:** 1. முகமூடி அணிந்து ஊர்வசியை பயமுறுத்தியவர் யார்?

2. பாஸிட்டிவ் எண்ணம் உள்ளவரை ----------- அண்டாது.

3. ஊர்வசி சிலாகிக்கும் கவிஞர்?

4. ஊர்வசி படமாக்கப்போகும் நபரின் பெயர்?

**பதில்கள்:**

**1. விஷ்ணுவர்தன் 2. சாத்தான் 3. தமிழச்சி தங்கபாண்டியன் 4. தாமரை அக்கா**

## நவம்பர் மாதத்துக்கான பட்டுப் புடைவைகள் பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகள்:

- 1. Z. ஜஃப்பர் மதினா பேகம், சென்னை-45
- 2. சு. இந்துமதி, புதுச்சேரி-6.
- 3. M. மீனாக்ஷி, சின்னசேலம்

**பங்கேற்ற வாசகர்களுக்கு நன்றிகள்...! பரிசு பெற்றவர்களுக்குப் பாராட்டுகள்!**




"எங்க ராஜா, நான் உள்பட அரண்மனை கடை ஊழியர்கள்வரை எல்லோருக்கும், 'ஒரே மாதிரியான' சாப்பாடுதான் தினமும் 'தயார்' பண்ணச் சொல்லுவார்!"

"'மெனு' நீதி மன்னன்னு சொல்லு!"

- வெ.சீதாராமன்

# 'மெனு' நீதி மன்னன்!

"என்னங்க தலைவர் என்ன கச முசங்கறாரு?"

"எவ்வளவு சொன்னாலும் கேக்காம டொண்டீ டொண்டீ கேம்ல ஒவ்வொரு அணியிலும் 20 பேர் ஆட ணும்னு அடம் பிடிக்க றாரு!"

- என்.ஜி. ராமன்





தள்ளுவண்டி பழ வியாபாரி வீட் டுக்குப் பெண் பார்க்கப் போனது தப் பாப் போச்சு."

"ஏன் என்ன ஆச்சு?"

"அழகான பெரிய பெண்ணைக் காட்டிட்டு, சுமாரான சின்ன பெண் ணைத் தலையில கட்டிட்டார்."

- சாயம் வெ. ராஜாராமன்




க்ளெமண்ட், பெரம்பூர்

**டே டிரேடிங்கில் ஈடுபட்டால் நல்ல வருவாய் பார்க்கலாம் என்று நண்பர்கள் சொல்லுகிறார்கள். ஏற்றுக்கொள்ளலாமா?**

டி.பாலசுந்தரம் : ''தகுதியும் (பணம்,நேரம், ரிஸ்க் எடுக்கும் குணம்) திறமையும் (ஆராய்ந்து பார்க்கும் குணம், மெமரி பவர்) இருந்து சந்தையின் ரிஸ்க்கை சரியாக ஒருவர் புரிந்து கொண்டாரென்றால் டிரேடிங்கில் சற்று வருவாய் பார்க்கலாம். டிரேடிங்குக்கு வரும் ஒருவர் புரிந்துகொள்ள வேண்டிய முக்கியமான ஒரு விஷயம் உலகத்தில் இதுவரை எந்த ஒரு வியாபார நாளிலும் மார்க்கெட்டில் பங்குபெற்ற அத்தனை டிரேடர்களும் லாபம் சம்பாதித்துச் சென்றதாக சரித்திரமில்லை; உலகம் இருக்கும் வரை இனி அப்படிப்பட்ட ஒரு நாள் வர வாய்ப்புமில்லை. ஒரு சில டிரேடர்களில் நஷ்டம்தான் மற்ற டிரேடர்களின் லாபமாகின்றது. சந்தை நடைமுறையில் இதைப் பார்த்தால் இன்று



# ஒருவரின் நஷ்டம்... இன்னொருவரின் லாபம்!



பல டிரேடர்களின் நஷ்டம் சில டிரேடர்களின் லாபமாகிக்கொண்டிருக்கிறது.

முதலில் டிரேடிங்கில் ஈடுபடுபவர்கள் அனைவரும் ஒரு தொழில் செய்வதைப்போன்ற ரிஸ்க்கினை எடுக்கிறார்கள். ஒரு தொழில் வெற்றி பெற எத்தனை விஷயங்களில் உங்களுக்குத் திறமை வேண்டியிருக்குமோ அத்தனை விஷயங்களும் அதைவிட, சற்று அதிகமாகவே உங்களுக்கு டிரேடிங்கில் வெற்றிபெற வேண்டியிருக்கும். ஒரு தொழிலில் வெற்றி பெற முதலீடு, ப்ராடெக்டாகயிருந்தாலும்/சர்வீஸாகயிருந்தாலும் ஒருவிதமான அதீத தனித்தன்மை, மற்றும் நேரம், பணம், கணிப்பு, சவால், இடர்பாடுகளை நிர்வகிக்கும் திறன் இவையனைத்தும் நிச்சயம் வேண்டும்.



ஜி.டி.பாலசுந்தரம்

டிரேடிங்கில் சவால்களும் இடர்பாடுகளும் அதிகமாக இருக்கும். நேரம் அதிகமாக ஒதுக்கவேண்டியிருக்கும். கணிக்கும் திறன் மிக மிக அதிகமாகத் தேவைப்படும். கூட்டத்திலிருந்து விலகி நின்று யோசிக்கக்கூடிய தனித்தன்மை மிக மிக அதிகம் தேவைப்படும். இவை அனைத்தும் உங்களுக்கு இருக்கின்றதா என்று பார்த்துக்கொள்ளுங்கள். பின்னர் டே டிரேடிங்கை தொடங்குங்கள்.''

**தேவதாஸ், ராணிப்பேட்டை**

ஒருவரின் ஓய்வூதியத்தில் ஒரு தொகையை, மருத்துவ உதவிக்காக பிடித்துக்கொள்கிறார்களே, அதனால் அவருக்குக் கிடைக்கும் பலன்கள் என்ன?

மத்திய அரசில் பணிசெய்பவர்கள் மற்றும் ஓய்வூதியம் பெறுபவர்களின் வசதிக்காக ஆரம்பிக்கப்பட்ட 'சென்ட்ரல் கவர்ன்மெண்ட் ஹெல்த் ஸ்கீம்' என்ற ஸ்கீமிற்கான பிடித்தம் தான் அது. இந்த ஸ்கீமின் கீழ் ஓய்வு பெற்றவர்கள் மருத்துவ வசதிகளைப்பெற வழி இருக்கின்றது. உங்களுடைய பே-கிரேடை வைத்து நீங்கள் செலுத்தும் தொகையும் மாறுபடும். இந்த ஸ்கீம் பற்றி மேலும் விவரங்கள் அறிய http://mohfw.nic.in/cghs.htm என்ற இணைய தளத்தைப் பார்க்கவும்.

மதம் சார்ந்த பின்னணி இல்லாமல் காங்கிரஸில் மாநில அளவில் முக்கியத் தலைவராக உயர்ந்திருப்பவர் பீட்டர் அல்போன்ஸ். "ஜனநாயகத்தில் எண்ணிக்கை முக்கியமாதலால் கிறிஸ்தவர்கள் ஆள்வதற்கு ஆசைப்படக் கூடாது" என்று சொல்கிறார் பீட்டர் அல்போன்ஸ்.

**தமிழ்நாட்டில் கிறிஸ்தவர்கள்?**

"கடைசியாக எடுக்கப்பட்ட சர்வேயின்படி தமிழ்நாட்டில் கிறிஸ்தவர்கள் 11-13 சதவிகிதம் இருக்கிறார்கள். இஸ்லாமியர்களுக்குச் சமமாக இருக்கிறார்கள் என்று சொல்லலாம். ஆனால், கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர் களைப் போல ஆங்காங்கே அடர்த்தியாக வசிக்காமல் பரவலாக வசிக்கிறார்கள். இஸ்லாமியர்கள் தங்கள் தோற்றம் மற்றும் கலாசாரத்தின் காரணமாக சமூகத்தில் தனித்துத் தெரிவார்கள். வாக்கு வங்கியாக உருவாகியிருக் கிறார்கள். ஆனால் கிறிஸ்தவர்கள் அப்படியல்ல... தென் தமிழ்நாட்டில் பார்த்தால் ஒரு குடும்பத் துக்குள்ளேயே அண்ணன் இந்துவாகவும் தம்பி கிறிஸ்தவராகவும் இருப்பார்கள்."

**கிறிஸ்தவர்களின் அரசியல் ஈடுபாடு?**

"சிறுபான்மையான கிறிஸ்தவர்களுக்கு வாழ்வதற்கான உரிமை வேண்டி போராடவே சரியாக இருப்பதால் அவர்கள் ஆள்வதற்கு ஆசைப்படுவது என்பது யதார்த்த நோக்கில் சரியாக வராது. காரணம் ஜனநாயகத்தில் எண்ணிக்கை முக்கியம். ஒரு முதல்வராகவோ ஏன் எங்கள் காங்கிரஸில் மாநிலத் தலைவராகவோ கூட ஒரு கிறிஸ்தவர் வந்ததில்லை. ஜெரோம் டி.சூசா, ரோச் விக்டோரியா, லூர்துசாமி பிள்ளை, மாசிலாமணி, திருப்பூர் வின்சென்ட், மார்ஷல் நேசமணி, லூர்தம்மாள் சைமன், எட்மண்ட் ஆகியோர் (சிலர் விடுபட்டிருக்கக் கூடும்) அரசியலில் பளிச்சிட் டவர்கள்.

பள்ளிக்கூடம், அனாதை இல்லம், முதியோர் இல்லம் நடத்துவதில் ஆர்வமாக இருக்கும் கிறிஸ் தவர்கள் அரசியலில் இறங்கத் தயக் கம் காட்டுகிறார்கள். பொதுவாகப் பார்த்தால் தங்கள் பாதுகாப்பு, சுதந்திரம் ஆகியவற்றை கட்டிக் காப்பாற்றும் நோக்கில் பெரும்பான் மையோடு இணைந்து, நல்லிணக் கத்தோடு வாழ்பவர்கள் கிறிஸ் தவர்கள்."

**கிறிஸ்தவர்கள் அரசியல் வீச்சு?**



"பெரும்பாலும் படித்தவர்கள் ஆதலால் நாட்டு நடப்பை நன்கு தெரிந்து வைத்திருப்பார்கள். எல்லா அரசியல் கட்சியிலும் பரவலாக இருக்கிறார்கள். ஆர்.எஸ்.எஸ்., பா.ஜ.க. செல்வாக்குக் கூடுவதை உணர்ந்தால், மத ரீதியாக அரசியலில் திரள்வார்கள். நேரடியாகச் சொல்வ

தானால் தங்கள் இயல்பான வாழ்வுக்கு ஆபத்து ஏற்படும் என்று தெரிந்தால் அணி திரள்வார்கள். மதமாற்றத் தடைச் சட்டத்தை ஜெயலலிதா கொண்டு வந்தபோதும், அவர் ஆர்.எஸ்.எஸ். ஊதுகுழலாகச் சில கருத்துகள் சொன்னபோதும் அவருக்கு எதிராக அணி திரண்டு 2004 எம்.பி. தேர்தலில் ஜெயலலிதாவை தோற்கடித்தார்கள்.''

**வோட்டுக்காக தாஜா...?**

''இப்போது சிறுபான்மையினர் வோட்டுக்களைக் கவர பா.ஜ.கவும் இஃப்தார் நோன்பு நிகழ்ச்சி நடத்துகிறது. ஜெயலலிதா கூட கிறிஸ்துமஸ் விழாவில் கலந்து கொள்கிறார். பெரும்பான்மையோரை, சிறுபான்மையோருக்கு எதிராகத் தூண்டி



போடுவார்கள் என்று நம்புகிறேன். இருந்தும் இறுதி முடிவை பிஷப்தான் எடுப்பார் என்பதுதான் யதார்த்த நிலை.''

"ஆட்சியில் நடந்த திட்டங்கள், நன்மைகள் ஆகியவற்றைப் பொறுத்தே வோட்டுப் போடுவார்கள். ஆயினும், இறுதி முடிவை பிஷப்தான் எடுப்பார்."

**அலைவரிசை ஊழலுக்குப் பிறகு தி.மு.க.வுடன் கூட்டு தொடருமா?**

''காங்கிரஸ், ஊழலுக்கு ஒரு நாளும் துணைபோகாது. அலைவரிசை விவகாரத்தில் ஊழல் நிரூபிக்கப்பட்டால் ராசா மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று கலைஞர் சொல்லியிருக்கிறார். எனவே ஊழலுக்கு நடவடிக்கை எடுக்கப்படும் பட்சத்தில் சேர்ந்து பணியாற்றுவதில் என்ன சிரமம் இருக்கப் போகிறது?''

**அலைவரிசை தவிர மற்ற ஊழல்களுக்குப் பின்னர் காங்கிரஸ் செல்வாக்குக் குறைந்துவிட்டதா?**

''காங்கிரஸைப் பொறுத்த மட்டில் சம்பந்தப்

# இனி சூழ்ச்சி எடுபடாது!

விடும் ஆர்.எஸ்.எஸ். சூழ்ச்சி இனி எடுபடாது. காரணம் இரண்டு தரப்பிலும் மோதல் நடந்தால் இழப்பு தங்களுக்குத்தான் என்று புரிந்து கொண்டிருக்கிறார்கள்.''

**வரும் தேர்தலில் கிறிஸ்தவர்களின் நிலைப்பாடு?**

''மதரீதியிலான அணி திரட்டலுக்கு வாய்ப்பில்லை. ஆட்சியில் நடந்த திட்டங்கள், நன்மைகள் ஆகியவற்றை பொறுத்தே வோட்டுப்

பட்ட நபர்கள் மீது நடவடிக்கை எடுத்திருப்பதால், மரியாதை கூடியிருக்கிறது. ஊழல் என்பது காங்கிரஸுக்கு மட்டும் உள்ள பிரச்னை அல்ல. உலகமயமாக்கல், தாராளமயமாக்கல் ஆகியவற்றால் ஏற்பட்ட பொருளாதார வீச்சு காரணமாக, பெரிய தொழிலதிபர்கள் தங்களுக்கேற்றபடி அரசு செயல்பட பல்வேறு வழிகளில் அரசியல் கட்சிகளைப் பயன்படுத்துகிறார்கள். இது ஜனநாயகத்துக்குப் பெரிய அச்சுறுத்தல். அனைவரும் பேசித் தீர்வு காணவேண்டும். இல்லையேல் ஜனநாயகம் புதைகுழிக்கு அனுப்பப்படும்.''

- ப்ரியன்

# வட்டமேஜை

"ஜாலி விசிட் பகுதியில் நீங்க போன P.S.G.R. கிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரி மாணவிகள் அசத்த மட்டுமா செய்கிறார்கள். சும்மா பின்னிப் பெடலெடுத்துட்டாங்க. அதிலும் அப்பா ஏழுமலை போட்ட சைன்... ஹா...ஹா...ஹா..."

- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

கல்கி விழாவின் தொகுப்புரை நேரில் வர இயலாத குறையைத் தீர்த்தது. தேங்க் யூ.

- அம்மு, சென்னை

கலைஞரது வெளித் தோற்றம் மட்டுமே ஜனநாயகம்; உள்ளுக்குள்ளே சுயநலம், சர்வாதிகாரப் போக்கு; தமிழருவி மணியனுக்குத் தெரியாததா? நமக்குத் தெரிந்துவிடப் போகிறது. அப்படியே ஏற்றுக் கொள்கிறோம்.

- பிரபாலிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்

பம்பாய் சகோதரிகள் 50 வருடத்துக்கு மேலாக இசைக்கச்சேரி செய்தும், எளிமையின் சிகரமாக இருக்கிறார்கள்.

- நா.பாலசுப்பிரமணியன், சென்னை



'அம்மாவின் கை ஸ்பரிசம்' - அம்மாவின் கை ஸ்பரிசத்தைப் பெற்ற ஒவ்வொரு மகளின் மனத்தைத் தொட்டு கண்டிப்பாக வருடியிருக்கும்.

- பிரேமா ராவ், ஸ்ரீரங்கம்

நாதஸ்வர கிராமங்கள் பற்றிய கட்டுரை பிரபல வித்வான்கள் பற்றித் தெரிந்துகொள்ள உதவியாக இருந்தது.

- ஹேமாப்புஜம், சென்னை

அட்டைப்பட ஜோடி அழகோ அழகு... இசையின் அழகு பயாஸ்கோப்

வழியாக 'சினித்துளி' பனித்துளியாக மினுக்கியது.

**- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்**

**வி**ஜயகாந்துக்கும், சரத்குமாருக்கும் அரசியலில் தெளிவு உண்டு; சாணக்கியத்தில் குழப்பமும் உண்டு என்ற தராசாரின் பதிலில் உண்மையுண்டு!

**- அ. ராஜப்பன், சென்னை**

**வா**சகர்களின் மலரும் நினைவுகளுக்குக் களம் அமைத்துத் தரும் 'மை ஆல்பம்' பகுதி செம தூள்மா!

**- ஜி.எம்.மஞ்சரி, கிருஷ்ணகிரி**

**சி**று வயதில், தியேட்டரில் படம் முடிந்ததும், செருப்பைக் கழற்றி, அட்டென்ஷனில் நின்று, தேசிய கீதம் பாடிய, மலரும் நினைவுகளை எண்ணத் தூண்டிவிட்டது பயாஸ்கோப்...

**- என்.கோமதி, நெல்லை**

**அ**னைத்துக் கேள்விகளுக்குமே தரம் மிக்க பதில் கூறும் தராசு, சுவை கூட்டித் தரும் விதம் தனி அலாதி.

**- ஆர்.ஜி.காயத்ரி, திசையன்விளை**

# இதுதான் இசையின் அழகோ!

**'தும்**புரு'வின் குண்டக்க மண்டக்க! ரண்டக்க ரண்டக்க! டு மச்! வயிறு வலிக்கு லேகியம் உண்டாங்க?

**- எஸ்.ஆர்.ஹரிஹரன், சென்னை**

**கு**ழந்தையையும் கடவுளையும் இணைத்துத் தந்த கவிஞர் லதாமகனின் கவிதை வரிகள் ஒரு புதிய பார்வையாக இருந்து ரசிக்க வைத்தது.

**- கவிஞர் அய்யாறு வாசுதேவன், சென்னை**

**இ**ளமையான எழுத்துக்கு அசத்தலான ஓவியம். ஒவ்வொரு வாரமும் தொடக்கத்தில் காதல் கவிதையென தூள் கிளப்புது. காதல் கேம்பஸ் தொடரைப் படிச்சாலே வயசு குறைஞ்சுடுது.

**- லதா, மாதவரம்**

**சீ**ஸன் ஸ்பெஷல் அருமை. இசை மழையில் நனைய வைத்துவிட்டீர்கள். அத்தனை கச்சேரிகளுக்கும் சென்று வந்த திருப்தி ஏற்பட்டது.

**- என். காளிதாஸ், சிதம்பரம்**

**ந**வீன இலக்கிய மேன்மைகளை மேலும் அறிய ஆவல் படுத்தும் 'கனவு பல காட்டல்!'

**- ஜி.ஸந்தானம், சென்னை**

**ஓ** பக்கங்களில் இரண்டு விஷயங்களைப் படித்து முடித்ததும், 'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன், கெடுப்பார் இலானும் கெடும்' என்ற குறள் ஞாபகத்துக்கு வந்தது.

**- வே.ஈஸ்வரன், இராஜபாளையம்**

**வி**ட்டலன் தொடர் வெகு அருமை. நம் பாவம் தீர்க்கும் எழுத்து யாகம்.

**- அரிகிருஷ்ணன், சோழிங்கநல்லூர்**

-சுவாதி

# ஊசிப்பட்டாசு




சுபிக்ஷா ரங்கராஜன் 'ஏரானாபை' என்று தோடி ராக வர்ணத்தை எடுத்தவுடனேயே கச்சேரி சூடுபிடித்து விட்டது. ஊசிப் பட்டாசாக மேல் காலத்தில் (செகண்ட் ஸ்பீட்) கற்பனை ஸ்வரங்கள் படபடவென்று விழுந்தன. பேகடா ராகத்தைச் சாறாகப் பிழிந்து கொடுத்து விட்டார். அதிலும் அவர் வல்லின- மெல்லின வேறுபாடு கொடுத்துப் பாட, பழச்சாறை அழகான கோப்பையில் ஊற்றிப் பரிமாறியது போல் அமைந்தது. இந்த ராகத்தில் சுபிக்ஷா தேர்ந்தெடுத்த தமிழ்க் கீர்த்தனை ''கடைக்கண் வைத்தென்னை ஆளம்மா...'' மிச்ர சாபு தாளத்தின் விச்ராந்தி சேர்ந்து கொள்ள, பாடல் அருவியாய்ப் பொழிந்தது. 'மாயே த்வம்யாஹி' என்ற தரங்கிணி ராக தீக்ஷிதர் கீர்த்தனையை மிக மிக வித்தியாசமாகப் பாடினார். அடுத்து பளிச்சென்று மாற்றாக தியாகராஜரின் நிரவதி சுகதா. 'அரைப் பணத்தில் கல்யாணம்; அதிலே கொஞ்சம் வாண வேடிக்கை' என்று பழமொழி சொல்வார்கள்; அதுபோல் இந்தச் சில்லுண்டி கீர்த்தனைக்கும் ஸ்வரம் போட்டுக் காட்டிவிட்டார் சுபிக்ஷா. பிரதானமாக ஆலாபனை செய்த வராளி ராகமும் சேஷாசல நாயகம் கீர்த்தனையும் பாடகியின் நீண்ட கால பயிற்சியையும் அக்மார்க் பாடாந்தரத்தையும் உணர்த்தின. 'அரவிந்த பத்ர நயனம்' என்ற வரி நிரவலுக்கு ஏற்றது. அதை மிக நன்றாக நிர்வாகம் செய்து வழங்கினார். அக்கரை சுவர்ணலதா நெடுகிலுமே தமது வயலின் வாசிப்பால் கச்சேரிக்குக் களையூட்டி வந்தார். மிருதங்கம் வாசித்த அர்ஜுன் கணேஷ் நிழல்போல் பிரதான பாடகரைப் பின்பற்றி வந்து, தனியாவர்த்தனத்தில் புயலாக மாறி விவகாரமாய் வெளுத்துக்கட்டினார். ''பாரோ ப்ரணா'' என்ற யமன் ராக மீரா பஜன் பக்தி வெள்ளத்தில் ஆழ்த்த, நிறைவான கச்சேரி கேட்ட திருப்தி. பிரும்ம கான சபாவில் சுபிக்ஷா செய்த இந்தக் கச்சேரிக்கு சுமார் ஐம்பது பேர் வந்திருந்தனர்... இந்த சீசனில் அத்தனை பேரைக் கட்டிப்போட தரமான சங்கீதத்தால்தான் முடியும்.

**சுவாதியின் சுவடி சொல்வது:** சுபிக்ஷா திட்டமிட்டு உழைத்தால் மத்தியானத்திலிருந்து மாலை கச்சேரிக்கு முன்னேறலாம்.

**ஜிலுஜிலுவும் பிகு சுகுவும்!**

நிரவல் நல்ல பிடிப்புடன்; கல்பனா சுவரங்களோ சர்வலகுவாக; ராகம் பாடுவதிலோ லாவகம்; காலப்பிரமாணமோ ஆணி அடித்தாற்போல்! இவ்வளவு அம்சங்களும் நிறைந்திருந்தன கனகதுர்காவின் கச்சேரியில்! (பிரும்ம கான சபா) மாயா மாளவகௌளையில் தியாகய்யரின் விதுலகு

## ஸ்வரங்கள்!

### பாட்டி கை சாப்பாடு!

'பாட்டி கை ருசியான சாப்பாடுபோல' பாரம்பரிய ருசியுடன் இருந்தது பைரவியின் பூர்விகல்யாணி ராகம். இலக்கண சுத்தமாக அமைந்தது மாளவியின் ஆந்தோளிகா. எத்தனை முறை கேட்டாலும் அலுக்காத 'ராக சுதா ரச', தியாகய்யரின் கீர்த்தனை, அதற்கு குஞ்சலம் கட்டினாற் போல் மிகப் பொருத்தமான சுவரங்கள்... மங்களகரமாக ஸ்ரீராக வர்ணத்துடன் கச்சேரியைத் தொடங்கி, கௌளையில் ப்ரணமாம்யஹம் கீர்த்தனைக்கு முன்னேறினர் சகோதரிகள். அருணாசல கவிராயரின் 'ராமனுக்கு மன்னன் முடி தரித்தாலே' என்ற ராம நாடகக் கீர்த்தனை ஒரு நல்ல 'பிரேக்.'

பூர்வி கல்யாணியில், ச்யாமா சாஸ்திரியின் 'நினுவினா' கிருதியை நேர்த்தியாய்ப் பாடி, நிரவலை விஸ்தாரமாய் செதுக்கி, சுவரம் ஒருவருக்கொருவர் சளைக்காமல் பாடியதில், அங்கே ஒரு அழகிய சிற்பம் வடிவெடுத்தது. ஆனால், குரலில் ஒரு தொய்வு இருந்துகொண்டே இருந்தது. பக்கவாத்தியம் அனுசரணையாக வாசிப்பது அக்கரை



கீர்த்தனையைப் பாடி, நிரவல், கல்பனா சுவரங்கள் செய்தபோது, எல்லாவற்றிலும் அவருடைய நல்ல ஞானமும் பயிற்சியும் பளிச்!! கன்னட ராகத்தில் தீக்ஷிதரின் ஸ்ரீமாத் ருபூதம் கீர்த்தனை, நீண்ட கார்வைகள் கொடுத்து தன்யாசி ராக ஆலாபனை - என்று மிகச் சிரத்தையுடன் பாடினார். எல்லா ஸ்தாயி களிலும் சீராய் ஒலிக்கும் குரல் கனக துர்கா வெங்கடேஷுக்கு. பிசிறில்லாத வயலின் வாசிப்பு கல்யாணி சங்கருடையது. அடுத்து ஜிலுஜிலு வென்று வந்த



கரஹரப்ரியா ராகத்தில், அழுத்தம், அளவான பிருகா, காலப் பிரமாணம் என எல்லாமே கனகச்சிதம். பிரும்ம கான சபாவின் நிகழ்ச்சி கள் நடைபெறும் பெத்தாச்சி ஆடிடோரியம் தரமானது. பக்காவான மைக் சிஸ்டம். ரசிகர்கள் 50 பேர். இது சங்கீத சீசனுக்கு அதிகமென்றே சொல்ல வேண்டும். நிறைவாக இருந்தது. வரம்பு மீறாமல் வயலினை வாசித்தார் கல்யாணி சங்கர். நடசி நடசி கீர்த்தனை நல்ல பிகு சுகுவுடன் இருந்தது. கணக்கு வழக்கு பிசகாமல், சுவரங்

குடும்பத்தின் சொத்தாயிற்றே! சுவர்ணலதாவின் ஒத்துழைப்பு அபாரம். தீர்க்கமான மிருதங்க வாசிப்பு கும்பகோணம் சுவாமிநாதனுடையது. தனிக்கு ஒரு பிரத்யேக சபாஷ்! கானடாவில் 'என்ன சொல்லி அழைத்தால்' மறந்துபோன பாடல்; ரசிகர்களிடம் நல்ல வரவேற்பு.

**சுவாதியின் சுவடி சொல்வது:** நல்ல வித்வத்தும் அருமையான வழியும் உள்ள சகோதரிகளின் குரல் மட்டும் அவ்வப் போது அநியாயத்துக்குத் தொய்வதை போர்க்கால அடிப்படையில் சீர்செய் யணுமே!

## ஜல் ஜல்லென்று ஜோராய்...!

இரட்டை மாட்டு வண்டியில் பூட்டப் பட்ட ஜோடி மாடுகள் தடம் புரளாமல், சண்டித்தனம் செய்யாமல் ஜல்ஜல்லென்று ஜோராய் ஒற்றையடிப் பாதையில் நடப் பதைப்போல நித்யா- வித்யா இருவரும் சேர்ந்து பாடினர். கார்த்திக் பைன் ஆர்ட்ஸில் மதிய நிகழ்ச்சி. அதிக படா டோபமில்லாத பாட்டு. அடக்கமான குரல், கச்சேரி நிர்வகிக்கும் திறன் என்று, எதிலும் சோடையில்லாதவர்கள். வசந் தாவில் நின்னுகோரி வர்ணம், அதற்கு வேறுபாடாக ஹம்சத்வனியில் 'ஸ்ரீ ரகுகுல' என்ற தியாகய்யர் கீர்த்தனை. அதற்கு முத்தாய்ப்பாய் கல்பனா சுவரங் கள். கச்சேரி சுவாரஸ்யமாய் முன்னேறியது. மதிய நேரத்துக்குப் பொறுத்தமாய் பந்து வராளி ராகத்தை வித்யா தேர்ந்தெடுத்துப் பாடியது, தரமான வெண்ணெயில் காய்ச்சிய நெய்யாய் மணத்தது. அதை மேலும் முறுக காய்ச்சிக்கொடுத்தது போலிருந்தது கணேஷ்குமாரின் வயலின் வாசிப்பு! 'அப்பராமபக்தி' கீர்த்தனை, சலிப்புத் தட்டாத நிரவல்; சுவரங்கள் பாடும்போது சகோதரிகளிடையே நல்ல 'அண்டர்ஸ்டாண்டிங்' என்று பிளஸ் பாயிண்டுகள் கூடிக்கொண்டே போயின. ஒரு மொட்டு மலரும் நிதானத்துடன் நித்யா பைரவி ராகத்தைப் பாடினார். கணேஷ் குமாரும் பைரவியை நிலை நிறுத்தி வாசித்தார். குரு கன்யாகுமரிக்கு



* நித்யா
* வித்யா

வாழ்த்துகள். ச்யாமா சாஸ்திரியின் 'ஸரி எவ்வரம்மா' கீர்த்தனை. கண்ட ஜாதி ஜம்ப தாளம். தாளம் பிசகாமல் சுவரம் போட்டார். அதிக கணக்கு வழக்கில் ஈடு படாமல், இயல்பான லயத்தில் தோய்ந்து வந்த கற்பனை சுவரங்கள் தேனிலூறிய பலாவாய் இனித்தன. உமையாள்புரம் சிவராமன் சிஷ்யரான மதுரை சுந்தர் மிரு தங்கம் (பாடகர் மதுரை சுந்தர் அல்ல!) கச்சிதமான வாசிப்பு. பாரதியாரின் 'சந்திர னொளியில் அவனைக் கண்டேன்' எனும் பாக்யஸ்ரீ ராகப் பாடலுடன் கச்சேரி இனிதே முடிந்தது.

**சுவாதியின் சுவடி சொல்வது:** நாலு இடத் தில் பாடப்பாட இந்தச் சகோதரிகளின் புகழ் நாலு திசைகளுக்கு எட்டும்!

களைத் தீர்மானமாய்ப் பாடினார் கனகதுர்கா. ஈடு கொடுத்து வாசித்தார் கல்யாணி சங்கர். அர்ஜுன் கணேஷின் மிருதங்க வாசிப்பில் நல்ல முதிர்ச்சி! மாஞ்சி ராகத்தில் அம்புஜம் வேதாந்தத்தின் 'ஆற்று வெள்ளம்' என்ற ஓடப்பாட்டோடு கச்சேரியை வெற்றியுடன் கரை சேர்த்தார் கனகதுர்கா!

**சுவாதியின் சுவடி சொல்வது:** உழைப்புக் கேற்ற ஊதியத்தை கனகதுர்கா சீக்கிரமே பெறுவார்.

**களவாணி இயக்குனர் சற்குணம்:**

"இன்று உலகில் நடக்கும் தீவிரவாதம் எல்லாம் மனிதன் மனத்தில் அன்பு வற்றியதால்தான். இனி அதைச் சுரக்க வைப்பதுதான் நமது கடமையாய் இருக்கும். நான் தீபாவளியையும் கொண்டாடுவேன். கிறிஸ்துமஸையும் கொண்டாடுவேன். எனக்கு இதில் பேதம் இல்லை. எல்லோரும் எல்லாப் பண்டிகையையும் கொண்டாடினால் உலக சகோதரத்துவம் தானா வரும்."



பிரபுசாலமன்



விக்ரம்

**மைனா பட இயக்குனர் பிரபுசாலமன்:**

"என் மகனே உன் தகப்பன் புத்தியைக் கேள்; உன் தாயின் போதனத்தைத் தள்ளாதே. இவை உன் சிரசுக்கு அலங்காரமாக முடியும். உன் கழுத்துக்குச் சரப்பணியுமாயிருக்கும்

- நீதிமொழிகள் 1.8.9

இதன்படி நடப்பவர் வாழ்வு உயர்வுக்கு வரும்.

இதுதான் என் மனத்தில் எப்போதும் ஒலிக்கும் வாசகம்."

விஜய், விக்ரம் இருவரும் ஞாயிறு தோறும் சாந்தோம் சர்ச்சுக்குதான் போவார்கள். விஜய் சாந்தோம் சர்ச்சுக்குப் புதிய சபை ஒன்றைக் கட்டித் தர ஒப்புக் கொண்டாராம்.

**பாடகி கிரேஸ் கருணாஸ்:**

"எந்தக் காரியத்தை நீ அறியாததும் உனக்கு எட்டாததுமானதை நான் உனக்குச் செய்வேன்" என்று இயேசு சொல்லியிருக்கிறார். அதனால மனுஷங்ககிட்டே புலம்பறது வேஸ்ட். நான் ஆண்டவர்கிட்டே மட்டும்தான் பிரச்னையைச் சொல்வேன். 100 ஏழைகளுக்கு உதவி செய்துதான் கிறிஸ்துமஸ் கொண்டாடுவேன்."

- விஜய் கோபால்

# விஜய் கட்டும் சர்ச்!

ஆங்கில ஆசிரியரான ஜெபராஜ் சென்னை கக்கன்ஜி நகரைச் சேர்ந்தவர். ஜெபஜெயம் என்ற பெயரில் இருபது பேர்களை ஒன்றினைத்து, பதினைந்து வருடமாக கிறிஸ்துமஸ் கேரல் நடத்தி வருபவர். முறையாக கர்நாடகம் மற்றும் வெஸ்டர்ன் பயின்ற இவரிடம் கேரல் பற்றி கேட்ட போது...



ஜெபராஜ்

"காலம்தான் வாழ்வை வடிவமைச்சிக்கிட்டு போகுது. குளிர்காலக் குறிப்புகள் நம் இதயத்தின் ஈரமான நினைவுகளை முளைக்க வெச்சிடும். அதுபோலவே பனிக்காலம் வந்தால் இயேசு பிறந்த நாள்தான் பனிச்சின்னு பக்கம் பக்கமா சந்தோஷத்தைப் புரட்டும். அலங்காரம், ஆபரணம், ஆடைகள், தின்பண்டங்கள் என குடும்பம் சகிதமாய் கூடிக் கொண்டாடி அன்பை அனைவருக்கும் படையலிடும் ஆனந்த விழா கிறிஸ்துமஸ்.

கிறிஸ்துமஸ் கொண்டாட்டம்னா கேரல் இல்லாம இல்லை. தேவன் பிறந்தபோது தூதர்களும் மேய்ப்பர்களும் பாடினார்கள்னு வேதம் சொல்லுது. அதன் தொடர்ச்சிதான் இன்னிய வரைக்கும் வீடுவீடா கிறிஸ்துமஸ் கேரல் நடக்குது. எங்க சபையில இருக்கும் வாசிக்கத் தெரிஞ்ச, பாடத் தெரிஞ்ச ப்ரெண்ட்ஸ்களை செட்டு சேர்த்து ஒரு மாசத்துக்கு முன்னாடியே பக்காவா ப்ளான்போட்டு, பாடல்களை முதல்ல செலக்ட் பண்ணுவோம். பிறகு மெட்டுப் போட்டு, லேட்டஸ்ட் ட்யூனுக்கும் மாத்தி இசையமைத்து ஒத்திகை நடத்துவோம். பிறகு கிறிஸ்துமஸை முன்னிட்டு ஒவ்வொரு



நன்றி: சாமுவேல் தாமஸ்



# கந்திலிலே தூளிகட்டி ஆடும் வெள்ளி நிலவே..!

வீடாகச் சென்று கீதம் இசைப்போம். ஆஹா அது ஆனந்தம். அவ்வப்போது ஆங்காங்கே இளசுகளின் புன்னகையான ரசனையும், காதலிப்போர் காதலியின் வீட்டில் கேரல் இசைத்துத் தம் காதலை தேவ கீதத்தின் மூலம் கடத்து வதும், எதிரியின் வீட்டுக்குச் சென்று ஜபப்பாடல் பாடி அவனை சிநேகி தனாக மாற்றி கைகுலுக்குவதும் வய தானவர்களின் ஆசியைப் பெறுவதும் தத்தமது இசைத் திறமையைப் பறை சாற்றுவதும் இதன் பலாபலன்கள். சென்ற ஆண்டு என் இந்து நண்பன் கவின்கவி எங்களுக்காக, கிறிஸ்து பிறப்பு பற்றி ஒரு பாடல் எழுதினார்:

*கந்தலிலே தூளிகட்டி வெள்ளி நிலா ஆடியது,*
*காலம் அது நீசர்களின் காலம்.*
*சொர்க்கமொண்ணு பூமியிலே வந்ததுண்ணு பாடுங்கடி,*
*கர்த்தாது காலம் இது காலம்.*
*கர்த்தர் அள்ளித் தாரையிலே,*
*கஞ்சித்தண்ணி சோயிலே,*
*பஞ்சமுண்ணு ஏதுமில்ல தாயி,*
*அப்பங்களே ஆறுதலே ஆண்டவரின் ஆசியிலே,*
*நெஞ்சத்திலே சோகம் இல்ல தாயி,*
*நெஞ்சத்திலே சோகம் இல்ல தாயி.*

- இது எனக்குக் கற்பனை வரிகளாகத் தெரியவில்லை. அப்படியே நிஜமாகத் தெரிந் தது. பாடலின் மூலம் பரஸ்பரம் அன்பைத் தெரிவிக்கும்போது கிடைக்கும் அன்பளிப்புத் தொகைகளையும் நற்காரியங்களுக்குத்தான் செலவு செய்வோம். அதில் கிடைக்கும் சந்தோஷம் அலாதியானது. கிட்டத்தட்ட இந்துக்கள் மார்கழியில் வீதிவீதியாக பஜனை பாடி இறைவனின் புகழைக் காற்றில் விதைப்பதுபோலத்தான் இந்த கேரல் மூலம் இயேசு சொன்ன அன்பைத் தூவு கிறோம். நீங்களும் அடுத்த வருஷம் ஒரு கேரல் ஆரம்பியுங்களேன். பாடல் எழுதும், இசையமைக்கும் திறமையை வெளிப்படுத்த... அது இறைவனின் பெய ரால் வீடுதோறும் பரவட்டும்.''- என்றார்.

**- சுந்தர்ராஜ்**



## ஸ்மைல் ப்ளீஸ்!



# மை லைப்ரரி!



சின்ன வயசுல காமிக்ஸ் புத்தகம் படிக்கவும் பார்க்கவும் ஆரம்பிச்சதுல தொடங்கினது என் வாசிப்பு பழக்கம். அம்மாவுக்கு ராணிமுத்து நாவல். எனக்கு காமிக்ஸ். விவரம் தெரிஞ்ச வயசுல அது அப்படியே கவிதை, சிறுகதை, நாவல், இலக்கியம்னு ஏறுமுகமா மாறிச்சு புத்தகம் வாசிக்கறது. கவிதைகளில் நான் கட்டுண்டு கிடந்த காலத்திலிருந்து கடந்த நிமிடங்கள் வரைக்குமாக மகாகவி பாரதி என் காதலன். கவிதைகள் தவிர்த்து என் வீட்டு அலமாரிக்கு நான் முதன்முதலாக வாங்கி வந்து உடைமையாக்கியது எஸ்.ராமகிருஷ்ணனின் உப பாண்டவம். 2002ல் அரட்டை அரங்கத்துல என்னோட முதல் மேடைப் பேச்சு அரங்கேற்றம். அந்த மேடைப்பேச்சு அனுபவம்தான், புத்தகங்கள் படிக்

அரியலூர் மாவட்டம் செந்துறை பக்கத்துல உஞ்சினி கிராமம் என் பூர்விகம். இப்ப நான் வசிக்கறது செந்துறை. தாகூர் வித்யாலயா பள்ளி தாளாளர். எழுநூறு புத்தகங்கள் என் வீட்டு நூலகத்தில். கல்லூரி மாணவனாக இருந்தப்ப, நான் வாங்கின முதல் புத்தகம் அக்னிச் சிறகுகள். ஐ.ஏ.எஸ். ஆகணும்னு என் லட்சியம். முதல் நிலைத் தேர்வுல பாஸ் பண்ணிட்டேன். வெ.இறையன்பு எழுதின 'ஐ.ஏ.எஸ். வெற்றிப் படிக்கட்டுகள்' புத்தகம் தேடி ரொம்பவே அலைஞ்சேன். பாக்கெட்ல பணம் இருந்து தேடும்போது புத்தகம் கடையில இருக்காது. புத்தகம் இருக்கும்போது என் பாக்கெட்ல பணம் இருக்காது. எப்படியோ ஒரு வழியா அந்தப் புத்தகம் வாங்கிட்டேன். ஐ.ஏ.எஸ். தேர்வுக்கு அடுத்தகட்ட முயற்சிகள்ல இருக்கேன் இப்ப.

- குமார், செந்துறை



**வாசகர்களே!** உங்கள் வீட்டு நூலகத்தைப் பற்றியும் அதன் சிறப்பைப் பற்றியும் உங்களைக் கவர்ந்த நூல் குறித்த அனுபவங்களை ஃபோட்டோவுடன் எழுதி 'மை லைப்ரரி' என்று குறிப்பிட்டு அனுப்பவும். **பிரசுரமாகும் அனுபவத்துக்குப் பரிசு உண்டு.**

கிறது ரொம்ப ரொம்ப கட்டாயம்ங்கறத எனக்கு உணர்த்தியது. சுய முன்னேற்றம், தன்னம்பிக்கை குறித்து நிறைய வாசித்தேன். அதுலேர்ந்து ஆன்மிக உரை, கல்லூரி மற்றும் தொழிற்சாலைகளில் தன்னம்பிக்கைப் புத்தாக்க உரை வீச்சு என விரிவடைந்து கொண்டுள்ளது என் புத்தக வாசிப்பு உலகம்.

**- மகேஸ்வரி சற்குரு, கோவை**



# சிறகு விரிக்கும் அலமாரி



**எ**ன் அப்பாவின் பூர்விக கிராமம் புத்தமங்கலம். அமரர் கல்கி வீட்டுக்கு அடுத்த வீடு. ரெயில்வே ஆபீசர் என் அப்பா. அதனால், கோவை, பொள்ளாச்சி என நான் பிறந்ததும் வளர்ந்ததும் படித்ததுமாக ஆகிப் போயிற்று. கல்லூரிக் காலங்களில் கவிதைகள் மீதும் பாலகுமாரன் நாவல்கள் மீதுமாக என் வாசிப்பு படரத் தொடங்கியது. எழுநூறு புத்தகங்களுக்கும் மேலாக அமைந்தது வீட்டு நூலகம். கவிதைகள், நாவல்கள், கட்டுரைகள் என புத்தகங்கள் அடுக்குமல்லி போல வாசக மணம் பரப்பி நிறைந்துள்ளன.

என் வாசிப்பு வெளியில் பாலகுமாரனின் 'பந்தயப் புறா' நாவல் அடிக்கடி சிறகு விரியப் பறக்கும். கணிதத்துறை சார்ந்த ஆய்வுப் புத்தகங்களும் என் வீட்டு நூலகத்தில் இடம் பிடித்துள்ளன.

**- முனைவர் சாவித்ரி சேதுமாதவன், திருவானைக்காவல்**

# சிக்குபுக்கு

அப்பாவின் காதலால் ஒளி இழந்துபோன வீட்டுக்கு மகனின் காதல் விளக்கேற்றி வைப்பதுதான் சிக்குபுக்கு-படத்தின் கதை. அப்பாவின் காதல் குல்பி ஐஸ் கணக்காக குளுகுளு கவிதையெனில், மகனின் காதல் காக்டெயில் போதை. அப்பா, மகன் இரட்டை வேடத்தில் 'யார்யா இது ஆர்யாவா!' என ஆச்சர்யம் மின்னிமின்னி பிரகாசிக்கிறது. ஃப்ளாஷ் பேக்கில் விரியும் அப்பாவின் காதலில் ரசனையான சம்பவங்கள் மனத்துக்கு இனிப்பு. அப்பாவின் காதலியாக (மீனாள் பாத்திரத்தில்) ப்ரித்தி நடிப்பதற்கு ஏகப்பட்ட ஸ்கோப் அதையும் அவர் சரிவர செய்திருப்பதில் மனசுக்குள் நிற்கிறார். எப்போதும் போல சந்தானம் அண்ட் கோ நிகழ்த்தும் காமெடியில் வயிறு டரியல் ஆகிறது. ப்ரித்தியின் முறை பையனாக நடித்திருக்கும் அனூப், தம் காதல் கைகூடாதோ என்று புழுங்கி அழுகையில் ஏகப்பட்ட அனுதாபத்தைச் சம்பாதிக்கிறார். இவ்வளவு பாத்திரங்களுக்கு மத்தியில் ஸ்ரேயா, பாடல்களில் மட்டும் பளிச்சிடுவதால் சுத்தமாக அவரால் சோபிக்க முடியவில்லை. கே.பி.குருதேவ் கேமராவைப் போலவே கலோகியல் கஸின்ஸ், ஹரி - லெஸ்லியின் இசையும் சோபிக்கவில்லை. அப்பாவின் காதலி (ப்ரித்தி) மகளான ஸ்ரேயாவை மகன் ஆர்யா காதலிப்பதாகக் காண்பிப்பதிலும் அதற்கு ப்ரித்தி சம்மதிப்பதும் கதையின் மிகப் பெரிய லாஜிக் ஓட்டை. ஃப்ளாஷ்பேக் போகும்போது மெயின் கதையும், மெயின் கதையிலிருந்து ஃப்ளாஷ்பேக்குமென கதை மாறிமாறிப் பயணிப்பதால் சாதாரண ரசிகன் குழம்பித்தான் போவான். இயக்குனர் மணிகண்டன் கதையில், திரைக்கதையில் விழுந்திருக்கும் இந்த 'டொங்கனை' சரிசெய்திருக்கலாம்.

சிக்குபுக்கு - காதல் கலாட்டா.

- மகிமைராஜன்

# சிரிப்பில் மலரும் நட்'பூ'!





## கூட்டுச் சிறை!

கவிதைகள்,

கதைகள், போட்டி...

# கோகுலம்

ஜனவரி 2011 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

